கிறிஸ்தவ **வரலாற்றுச் சுவடுகள்**

#### மாத ஆய்விதழ் சந்தா விபரம்

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

**வங்கி விபரம்**

**Name: Tinnevelly Christian Historical Society**
**A/c Number : 1748 020000 3684**
**Bank name : Federal Bank**
**IFSC code: FDRL0001748**

**"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்"**
மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள
**G-Pay** மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற
எண்ணுக்கு செலுத்தவும்
காசோலை மற்றும் வரைவோலை செலுத்த
'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்'
( Tinnevelly Christian Historical Society )
என்ற பெயரில் எடுக்கவும்


**ஆசிரியர்**

**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
**கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,**
**பங்களாச் சுரண்டை-627859,**
**தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)**
**04633 290401, 91767 80001**

christianhistoricalsociety.in
tchsportal.co.in
christianhistorical@gmail.com


# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் பிரியமான கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள் சொந்தங்களுக்கு **இனிய சுதந்திர தின** வாழ்த்துக்கள்.

**உதிரங்களை உரமாக்கி உதித்த சரித்திரம் நம் சுதந்திரம், அதேபோலவே அடிமைத்தனத்திலிருந்து விடுதலை வாழ்வை தந்தது கிறிஸ்தவ மிஷனெரிகளின் உதிரமே!**

வரலாற்றுச் சங்க பணிகளில் எங்களோடு இணைந்து பயணிக்கும் அனைத்து உறுப்பினர்கள் மற்றும் வாசகர்களுக்கும் நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன். இம்மாத ஆய்விதழ் சிறந்த கட்டுரைகளை சுமந்து வருகின்றது. பழைய புத்தகங்களை மின்னியல் ஆக்கும் பணிகள் பல்வேறு இடங்களில் நடந்து வருகின்றது. பல அருட்பணியாளர்கள் வரலாறு, திருச்சபை வரலாறு, மொழிபெயர்ப்பு நூல்கள் வெளியிடுவதற்கு தயராக இருக்கின்றது. விரைந்து வெளியிடவும் அதன் தேவைகள் சந்திக்கப்படவும், வரும் நாட்களில் சங்க நூலகம் அமைக்கும் பணிகளை தொடங்க இருக்கிறோம் அதற்காகவும் ஜெபித்துக்கொள்ளுங்கள்.

இதுவரையிலும் நம்முடைய மாத இதழில் வெளி வராத கட்டுரைகளை எழுதவும், மக்கள் இன்றும் கேள்விப்படாத நிலையில் உள்ள வரலாற்று சம்பவங்களை கொண்டு செல்லும் நோக்கில் ஜெபத்துடனும், தரிசனத்துடனும் எழுத அன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

எனவே வாசகர்கள் இம் மாத ஆய்விதழை நண்பர்கள், உறவினர்களுக்கு அறிமுகப்படுத்த அன்போடு கூட கேட்டுக்கொள்ளுகின்றேன். ஒவ்வொரு மாதமும் இவ்விதழை வெளியிடுவதற்கு மிகுந்த பொருட்செலவுகள் உண்டு, மாத சந்தாவை புதுப்பித்து கொள்ளும்படி அன்புடன் நினைவுபடுத்துகிறேன். முடியுமானால் காணிக்கையாகவோ அல்லது நன்கொடையாகவோ கொடுத்து தாங்க அன்போடு கூட கேட்டுக் கொள்ளுகின்றேன்.

பராபரனின் பணியில்
*Manna Selvakumar*

G Pay


**மன்னா செல்வகுமார்**
ஆசிரியர்

**சுஜித் ரெக்ஸ்**
வடிவமைப்பு

**தொடர்புகொள்ள +91 91767 80001**

பேரா. அருள்திரு. தேவராஜ் மதன்,
கூடலூர்

# இவரைத் தெரியுமா? அக்குல்லா

அன்றைய ஒருங்கிணைந்த திருநெல்வேலி இன்றைய விருதுநகர் மாவட்டத்தில் வத்திராய்ப்புக்கு அண்மையில் உள்ள **"கிறிஸ்தியான் பேட்டையை"** (Christian Pattai) மையமாக கொண்டு தமிழகத்தில் மாபெரும் எழுப்புதல் பிரசங்கியாக இருந்த **"உக்கிராமன் கோட்டை"** கிறிஸ்தவ சகோதர (பிளேமவுத் பிரதரன்-Plymouth Brethren) திருச்சபையைச் சேர்ந்த **"அருட்திரு ஜான் கிறிஸ்தியான் அருளப்பன்"** (Rev. John Christian Arulappan) அவர்களுடன் திருப்பணிச் செய்த சில முக்கிய நற்செய்தியாளர்களுள் ஒருவர் **"அக்குல்லா"** (Aquila).

அன்றைய ஒருங்கிணைந்த திருநெல்வேலி மாவட்டம், இன்றைய தூத்துக்குடி மாவட்டம் சாத்தான்குளத்திற்கு அண்மையிலுள்ள **'அமுதுண்ணாக்குடி'** என்று ஓர் ஊர். இந்த ஊர் இன்றைக்கு **'அமத்தவண்ணாக்குடி'** என்று மறுவி **'அம்மாட்டான்'** என்றாகியுள்ளது. இந்த **'அம்மாட்டான்'** என்ற சிற்றூர், இச்சிற்றூரில் அக்கில்லா என்பவர் இருந்தார். இது இவரது கிறிஸ்தவப் பெயர் இவரது பழையப் பெயர் சிதம்பரம். இவரது பெற்றோர் குறித்த குறிப்புகளும் நம்மிடம் இல்லை.

இந்த **'அமுதுண்ணாக்குடி'** என்ற **'அமத்தவண்ணாக்குடி'** என்று மறுவிய **'அம்மாட்டான்'** என்ற சிற்றூரில் 1825 ஆம் ஆண்டு முதல் கிறிஸ்தவ திருச்சபை செயல்பட்டு வந்தது. இந்த திருச்சபையில் திரள்கூட்ட மக்கள் திருமுழுக்குப் பெற்று கிறிஸ்தவர்களாக மாறியிருந்தனர், பல எதிர்ப்புகளின் நடுவில் திருச்சபையானது வளர்ந்து, 1855 ஆம் ஆண்டு வாக்கில் சுமார் 300 கிறிஸ்தவர்கள் இருந்துள்ளதாக குறிப்பு ஒன்று கூறுகின்றது, ஆனால் இவர்களில் சுமார் இருநூறு பேர் சில மாதங்களிலேயே கிறிஸ்துவை மறுதலித்துப் பின்வாங்கினார். ஆனாலும் அருள்பணியாளர்கள் சோர்வில்லாமல் அருள்பணியாற்றி வந்தனர்.

அமுதுண்ணாகுடி என்ற அம்மட்டான் சிற்றூரில் இருந்த சிதம்பரம் அவர்கள் திருநெல்வேலியின் அப்போஸ்தலர் **"அருட்திரு. C. T. E. ரேனியஸ்"** (C. T. E. Rhenius) அவர்கள் நடத்தின பள்ளிகளில் ஒன்றில் ஒரு கிறிஸ்தவ ஆசிரியரின் கீழ் மூன்று ஆர் (Three R's) என்ற அதாவது 'படிப்பது' 'Reading', **'எழுதுவது'** 'Writing' மற்றும் **'கணக்குப் போடுவது'** 'Arthamatics' என்ற பாடத்தினை கற்றுக் கொண்டார். இக்காலக் கட்டத்தில் திருமறைப் பரப்பாளர்களிடம் (Preacher) இயேசு கிறிஸ்துவைக் குறித்தும், கிறிஸ்தவத்தைக் குறித்து கற்றுக்கொண்டார், இருப்பினும் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளவில்லை, இவர் திருமண வயதில் கிறிஸ்தவரல்லாத ஒரு பெண்ணைத் திருமணம் செய்து, கிறிஸ்துவற்றவராகவே வாழ்ந்து வந்தார். ஆனாலும் கிறிஸ்துப் பெருமானின் அன்பில் நிறைந்திருந்தார்.

சிதம்பரம் அவர்கள் ஒரு வியாபாரியாய் நாட்டு சக்கரை மற்றும் கருவாடு என அறியப்படும் பக்குவப்படுத்தப்பட்ட மீன் போன்றப் பொருட்களை வியாபாரம் செய்வதற்காக **'சென்னை'** என்ற **'மெட்ராஸ்'** மற்றும் அதிதொலைவில் உள்ள பல ஊர்களுக்கு உடன் வியாபாரிகள் மற்றும் பயணிகளுடன் வியாபாரத்திற்கெனச் செல்வது வழக்கம். சிறு வயதில் இவருக்குள் விதைக்கப்பட்ட திருவசனம் இவரை கைவிடவில்லை, எனவே இவர் வியாபாரம் செய்ய செல்கையில் பொதுவாக தன் ஊரிலிருந்த கிறிஸ்தவ வியாபாரிகளுடன் இணைந்து வியாபாரம் செய்யச் செல்வார். இந்த கிறிஸ்தவ வியாபாரிகள் வழக்கமாக காலையிலும், மாலைகளிலும் குறிப்பாக ஞாயிறு காலையிலும் கூடி, கடவுளுக்கு நன்றிச் சொல்லி, கடவுள் தங்களை ஆசீர்வதிக்க வேண்டும் என பிரார்த்திப்பார்கள். அவர்களுக்கு தன்னைக் காட்டிலும் அதிக நன்மைகள் கிடைக்கிறதோ என இவர் எண்ணினார், எனவே தன்னையும் கடவுள் அவர்களைப் போல் ஆசீர்வதிக்க வேண்டும் என விரும்பி யாருக்கும் தெரியாமல் இரகசியமாக ஒரு வேதாகமத்தை வாங்கி அதனை ஒரு ஆண்டில் முழுமையாக படித்துமுடித்து விட்டார். வேதாகமத்தைப் படித்ததினால் தன் ஆத்துமாவின் மீட்புக்காக இயேசுவின் மூலமாக மெய் கடவுளை முற்றுமாக நம்பத் தொடங்கினார்.

கடவுள் தமது அளவற்ற அருளால் சிதம்பரம் அவர்களை தொடர்ந்து பின்பற்றி வந்து அவரது வாழ்வில் ஒரு மாற்றத்தைக் கொணர்ந்தார், 1849 ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் ஒரு நாள் வியாபார பயணத்தின் போது இவர் 'ஏழாயிரம் பண்ணையில்' (Ezayiram Panney) திருப்பணியாற்றும் மரியான் உபதேசியாரை சந்தித்தார். மரியான் உபதேசியார் இவருக்கு கிறிஸ்து இயேசுவின் வழியாக இரட்சிப்பு, பாவமன்னிப்பின் நிச்சயம், திருமுழுக்கின் அவசியம், ஆண்டவருடைய பந்தி, கிறிஸ்து இயேசுவின் திருச்சபையின் நிலை, மற்றும் கிறிஸ்துவின் அரசு போன்றவைக் குறித்து பேசி திருமறையை ஆய்ந்ததினால், இவரும் திருமறையை இன்னும் அதிகம் ஆய்வு செய்தார்கள்.

சிதம்பரம் சத்தியத்தை மிக தெளிவாக விளங்கிக் கொண்டு இன்னும் உறுதியாக கிறிஸ்துவின் அடிச்சுவடுகளை பின்பற்ற தொடங்கினார். கிறிஸ்து வழங்கின அறிவுக்கெட்டாத சமாதானத்தையும் மகிழ்ச்சியையும் பெற்றார், கிறிஸ்துவை இன்னும் அதிகமாக அறிய ஆவல் கொண்டார். கிறிஸ்துவை அறிகின்ற அறிவின் மேன்மைக்காக கிறிஸ்துவின் பிரமாணத்திற்கு எதிரான நீண்ட முடி வளர்ப்பது, பட்டை நாமம் போடுவதுப்

போன்ற புறவினத்தாரின் பிற்போக்குச் சிந்தனைகளையும், பழக்க வழக்கங்களையும் வெறுத்து தள்ளினார்.

இவர் தன் மனைவி மற்றும் குடும்பத்தினரை தாம் கண்ட புதிய நம்பிக்கைக்குள் (விசுவாசத்திற்குள், Faith) கொண்டுவர அவர்களுடன் கிறிஸ்துவை குறித்து பேசினார். ஆனால் இவரது மனைவியைத் தவிர எவரும் அவரது அழைப்பை ஏற்றுக் கொள்ளவில்லை. இவரது துணைவியார் இவருடன் இணைந்து சத்தியத்தை ஏற்றுக் கொண்டு, மெய்யான கடவுளை வணங்கி அவரைப் பின்பற்றினார். இவர்கள் இருவரும் தங்கள் வீட்டிற்கு அண்மையிலுள்ள 'சாத்தான்குளம்' 'திருச்சபை அருட்பணி சங்கத்தை'ச் (Church Mission Society) சேர்ந்த தேவாலயத்தில் (Church) ஞாயிறு கிழமைகளில் (Sunday's) தவறாமல் கிராமத்தவர்களுடன் கடவுளைத் தொழச் செல்வார்கள், அந்த தேவாலயத்தில் குருவானவராக பணியாற்றிய அருட்பணியாளர் (Missionary) அருட்திரு. எஸ். ஹோப்ஸ் (Rev. S. Hobbs) அவர்கள் இவ்விணையினரை மிகவும் கவனமாக கவனித்து இவர் 'சிதம்பரம்' மற்றும் இவரது துணைவியார் ஆகிய இருவருக்கும் அப்போஸ்தலர் பவுலுக்கு உதவிய அக்குல்லா (Aquila), பிரஸ்கில்லா (Priscilla) போன்று இவர்களின் நற்குணநலத்திற்கு சான்றாக இவர்களுக்கு அக்குல்லா (Aquila), பிரஸ்கில்லா (Priscilla) என்றுப் பெயர் சூட்டி, 1849 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 10 ஆம் நாள் திருமுழுக்கு வழங்கி திருச்சபையினில் அங்கத்தினராக்கினார். மேலும், இவ்விணையினர் இந்த திருச்சபையில் தூண்களாக இருந்தனர். கிறிஸ்துவில் இவர் கொண்டிருந்த அன்பையும், இவருக்கிருந்த வேத ஞானத்தையும் வாஞ்சையையும், கண்டு அருட்பணியாளர் தன் பராமரிப்பில் இவரை திருச்சபையின் உபதேசியாராக ஏற்றுக்கொள்ள விரும்பினார், ஆனால் இவரோ சம்பளம் வாங்கிக் கொண்டு கிறிஸ்துவின் நற்செய்தியை அறிவிக்க விரும்பவில்லை.

அருட்திரு. எஸ். ஹோப்ஸ் ஸ்டீபன் (Rev. S. Hobbs Stephen) அவர்கள் 1815 ஆம் ஆண்டு லண்டன் மாநகரில் பிறந்தவர், 1838 ஆம் ஆண்டு போதக திருப்பொழிவுப் பெற்று 1839 ஆம் ஆண்டு பாளையங்கோட்டைக்கு (Palayamkottai) திருச்சபை அருள்பணி சங்கத்தின் (Church Mission Society) அருள்பணியாளராக வந்துச் சேர்ந்தார்.

1851 ஆம் ஆண்டு அக்குல்லா அருட்திரு. ஜான் கிறிஸ்டியன் அருளப்பன் (Rev. John Christian Arulappan) அவர்களுக்கு முதல் முறையாக அறிமுகமாகிறார். அப்போது அக்குல்லா அவர்களுடன் வேதாகமத்திலிருந்து பலத் தலைப்புகளைப் பற்றி அவர்களுடன் விவாதித்து இருவரும் நிறைவடைந்தனர். பின்னர் திருமறையின் விளக்கத்தில் விசுவாசிகளின் திருமுழுக்குப் பெற்றார். (முன்னதாக தெளிப்பு திருமுழுக்கை அருட்பணியாளர் அருட்திரு. எஸ். ஹோப்ஸ் Rev. S. Hopes அவர்கள் வாயிலாகப் பெற்றிருந்தார். இப்பொழுது அருட்திரு. ஜான் கிறிஸ்டியன் அருளப்பன் Rev. John Christian Arulappan அவர்கள் மூலம் விசுவாசிகளின் மூழ்கி திருமுழுக்குப் பெற்றார்).

அக்குல்லா அவர்கள் அருட்திரு. ஜான் கிறிஸ்டியன் அருளப்பன் அவர்களுடன் இணைந்து பல இடங்களுக்கு பயணித்து நற்செய்தி திருப்பணியாற்றினார், அப்பொழுது மாற்று சமயத்தாருக்கு நற்செய்தி பகிர்ந்து கொள்ளுவார், மாற்று சமயத்தார் கேட்கும் கடினமான கேள்விகளுக்கு பதில் அளிப்பது எப்படி என்று கற்றுக் கொண்டார். இவர் நாட்டு சக்கரை மற்றும் கருவாடு என அறியப்படும் பக்குவப்படுத்தப்பட்ட மீன் போன்றப் பொருட்களை வியாபாரம் செய்வதற்காக செல்லும் இடங்களில் நற்செய்தியை மக்களுக்கு கூறுவார். குறிப்பாக ஒரு கிராமத்திற்குள் சென்றவுடன் கைப்பிரதிகளை (துண்டறிக்கைகளை) வழங்கி, பின் அதற்கேற்றப்படி நல்லத் தலைப்பில் பேசுவார், பின்னர் தான் வருமானத்திற்காக கொண்டுப்போன பொருட்களை வியாபாரம் செய்வார்.

மட்டுமல்லாது, அக்குல்லா அருட்திரு. ஜான் கிறிஸ்டியன் அருளப்பன் அவர்களுடனும் மரியான் உபதேசியர் அவர்களுடனும் இணைந்து திருவிதாங்கூர் (Travancore), மதுரை Madurai போன்ற மாவட்டங்களில் நற்செய்தி பணியாற்றச் சென்று அவருக்கு அளிக்கப்பட்ட அருளின்படியே புறமதத்தவர்களுக்கு நற்செய்தியைப் பிரசங்கித்தார். திருச்சபை மக்களையும் கிறிஸ்துவில் உறுதியாக வாழ ஊக்கப்படுத்தினார். இவர் அதிக மகிழ்வோடும், விருப்பத்தோடும் கடவுளுடைய அரசைக் குறித்து பேசினார். மக்கள் மிகுந்த ஆவலுடன் கேட்டனர்.

நற்செய்திப் பணியில் மிக ஆர்வமுடன் பங்கெடுத்தவர் சில ஆண்டுகளுக்குப் பின் நற்செய்திப் பணியை முழுமையாக செய்வதற்கு தனது வியாபாரம் தடையாக இருப்பதாக உணர்ந்து வியாபாரத்தை விட்டு விட்டு முழுநேரமாக ஏழாயிரம் பண்ணையில் மரியான் உபதேசியாரின் (Marian Ubadesier / Catechist) திருப்பணியில் அவருக்கு உதவியாக நற்செய்திப் பணியாளராக மாற விரும்பி தன் விருப்பத்தை அருள்திரு. ஜான் கிறிஸ்டியன் அருளப்பன் அவர்களிடம் பகிர்ந்துக் கொண்டார், அப்பொழுது அருளப்பன் அவர்கள் இவரை தன் சொந்த ஊரில் வியாபாரம் செய்துக் கொண்டு கிறிஸ்துவுக்கு சான்றாக இருக்கும்படி ஆலோசனை வழங்கினார், அதன்படி சில காலம் இவர் தம் ஊரில் இருந்து வியாபாரத்தை கவனித்துக் கொண்டு நற்செய்திப் பணியும் ஆற்றினார். ஆனால், சில நாட்களுக்குப் பின்னர் அவர் மற்ற சகோதரர்களுடன் இணைந்துக் கொண்டார். சகோதரர்கள் இவர்களுடன் பேசினதினால் ஆறுதலும் பலமுமடைந்து, பின்னர் இவருடைய விருப்பத்தின்படியே மரியான் உபதேசியாரின் இல்லத்தில் அவருடன் தங்கி அவரது திருப்பணியில் உதவிச் செய்யச் சொன்னோம்.

இவர் தன் மனைவியை தன் கிராமத்தில் விட்டு விட்டு தனியாக 'ஏழாயிரம் பண்ணைக்கு' மரியான் உபதேசியாரிடம் வந்துச் சேர்ந்தார். இவரிடத்திலிருந்த திறனுக்கு ஏற்ற வண்ணம் திருச்சபைகளில் திருப்பணியாற்றினர். மரியான் உபதேசியாரிடம் சில காலமும், அருட்திரு. ஜான் கிறிஸ்டியன் அருளப்பன் அவர்களுடன் சில காலமும் தங்கியிருந்து திருப்பணியாற்றினார். இவர் அருளப்பன் அவர்களுடன் நற்செய்திப் பணிக்குச் சென்று பகல் வேளைகளில் மர நிழலில் ஓய்வெடுக்கும் நேரங்களில் தனிப்பட்ட நேரத்தில் வேதத்தை படிக்கும் போது ஏற்பட்ட கடினமான வேத பகுதிகளை விளங்கிக் கொள்வதற்காக அவரிடம் தன் சந்தேகங்களுக்கு விளக்கம் கேட்பார். அவரும் அதற்கு உகந்த பதிலளிப்பார். இவர் மரியான் உபதேசியாருக்கு திருச்சபையை

மேய்ப்பது, நற்செய்தி அறிவிப்பது போன்ற கடவுளுடைய பணியிலும், மரியானுடைய தோட்டத்தில் விவசாயம் செய்யும் பணியிலும் அவருக்கு பெருமளவில் உதவியாக இருந்தார் எனில் அது மிகையல்ல.

அக்குல்லா அவர்கள் ஒவ்வொரு மாலையிலும் அண்மையில் இருந்த கிராமத் திருச்சபைகளுக்குச் சென்று, அங்குள்ள விசுவாசிகளுக்கு 'வேதாகம சுருக்கம்' (Compendium of the Bible), 'தேவ வசனப் பால்' (The Milk of the Word of God) (இந்த இரண்டுகைநூல்களும்வேதாகமத்தில்தேர்வுச்செய்யப்பட்டமுக்கிய தலைப்புகளின் கீழ் உள்ள கருத்துக்கள்) போன்ற நூல்களிலிருந்து போதித்து கருத்தோடு உணர்வுப்பூர்வமாக ஜெபித்து வருவார். இவருக்கு தேவனுடைய வார்த்தையும், தேவனுடைய ஊழியமும் அவருக்கு தேன் போலும், பால் போலும் இனிப்பாயும், பலமாயும் இருந்தது. மரியான் உபதேசியாரின் தோட்டத்தில் (வயலில்) விவசாயம் செய்கையில் தன் பிழைப்புக்காக கடவுள் கொடுத்த தொழிலாக கருதி அதனை முழு மனதோடு செய்தார்.

புறவினத்தார் நடுவில் அக்குல்லாவின் அயராத நற்செய்தி பணியைக் குறித்து கேள்வியுற்ற பல அருட்பணியாளர்கள் அவரை தங்களுடன் இணைந்து திருப்பணியாற்றிட விரும்பினார்கள். அவர்களுள் ஒருவர் அருட்திரு ஜெ. பிரதர்டன்னும் (Rev. J. Brotherton) ஆவார். அவர் தன்னுடைய உபதேசியார் ஒருவர் மூலமாக இவரை தங்கள் அருட்பணி சங்கத்தில் இணைந்து தூய நற்செய்தியை எளிமையாக கற்பிக்க வர வேண்டும் எனவும் அப்படி வந்தால் அதற்காக மாதா மாதம் நல்ல சம்பளம் அளிப்பதாகவும் வாக்குக் கொடுத்தார். ஆனால் அவர் மாத சம்பளம் பெற்றுக் கொள்ள விருப்பம் காட்டவில்லை. மாறாக மிகுந்த திருப்தியோடும், மகிழ்ச்சியோடும் மரியான் உபதேசியாருடன் இணைந்து அருளப்பன் அவர்களது திருப்பணியில் திருப்பணியாற்றவே அதிக ஆவலாயிருந்தார். அருட்திரு. ஜான் கிறிஸ்டியன் அருளப்பன் அவர்கள் எப்பொழுதெல்லாம் கடவுள் அவருக்கு வழி திறக்குமோ அப்போதெல்லாம் இவரது திருப்பணிக்கு பலனாக அதிக உதவிகள் செய்வாரோ அப்போதெல்லாம் இவர் கேட்காமலெயே அவருக்கு உதவியாக விவசாயத்திலிருந்து வரும் பொருட்களையோ அல்லது பணத்தையோ உதவி தொகையாக வழங்கி வந்தார்.

அக்குல்லா அவர்கள் எப்போதெல்லாம் திருப்பணியில் ஈடுப்பட்டிருக்கும் தம் கிறிஸ்தவ சகோதரர்கள் தவறு செய்வார்களேயாகில் அவர்களை தாம் படித்த அல்லது கேட்ட வேதவாக்கியங்களின் அடிப்படையில் கடிந்துக்கொள்ளவும் எச்சரிக்கவும் தயங்கமாட்டார். மரியான் உபதேசியாருடன் தங்கியிருந்த காலங்களில் இரவில் ஒருவேளை தூக்கம் வராமல் நடு இரவில் எழுந்துவிட்டால் மரியான் உபதேசியார் அவர்களுடன் உறவாடி ஊக்கமாக ஜெபிப்பார்கள், இவர் எல்லா பரிசுத்தவான்களிடமும் அன்புள்ளவராயிருந்தார். அருட்திரு. ஜான் கிறிஸ்டியன் அருளப்பன், மரியான் உபதேசியார் ஆகிய வயதில் முதியவர்களிடம் மூத்த சகோதரர் என்றும் பரிசுத்த ஆவியானவரால் கிறிஸ்துவின் இரகசியங்களை வெளிப்படுத்துகின்ற கிறிஸ்துவின் ஊழியர் என்ற நிலையிலும் அதிக மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தார்.

அக்குல்லா அவர்கள் மரியான் உபதேசியாரிடம் தங்கியிருந்த காலங்களில் இவ்விருவரும் அடிக்கடி ஏழாயிரம் பண்ணையிலிருந்து 30 மைல் அல்லது 48 கிமீ தொலைவில் உள்ள வத்திராயிருப்புக்கு அண்மையிலுள்ள கிறிஸ்தியான் பேட்டைக்கு (Christian Pettai) சென்று அருட்திரு. ஜான் கிறிஸ்டியன் அருளப்பன் அவர்களிடம் வேதம் கற்றுக் கொள்ளவும், திருவிருந்தில் பங்கு கொள்வதற்கும் போவார்கள். அவ்வாறு போகையில் இவர்கள் இருவரும் தங்களுக்கு அருளப்பட்ட திறனுக்கு ஏற்றார் போல் கிறிஸ்தியான் பேட்டை திருச்சபையில் பிரசங்கிப்பது வழக்கம். அவ்வாறு 1858 ஆம் ஆண்டு கடைசியாக இவர் ஏழாயிரம் பண்ணைக்குச் செல்கையில் அவர் திருச்சபையாருக்கு 2 தீமோத்தியு 4:7,8 வசனங்களை அடிப்படையாக கொண்டு பிரசங்கம் செய்தார். இதுதான் இவர் திருச்சபை மக்களை உற்சாகப்படுத்த செய்த கடைசி பிரசங்கம். திருச்சபையாரும் இவரது பிரசங்கத்தை மிக கவனத்துடன் கேட்டனர்.

கிறிஸ்தியான் பேட்டையிலிருந்து அக்குல்லா அவர்களும், மரியான் உபதேசியார் அவர்களும் ஏழாயிரம் பண்ணை திரும்பி சென்றார்கள். பயணத்தில் அக்குல்லா திடீர் என உடல் நலம் பாதிக்கப்பட்டார். பல மருத்துவம் செய்தும் இவரின் உடல் நலமடையவில்லை, இவர் தன் ஊருக்குச் சென்று குடும்பத்தை பார்க்க வேண்டும் என விருப்பினார். எனவே இவரை சில மருந்துகளோடு சில உதவியாளர்களின் துணையோடு அவரது கிராமத்திற்கு மரியான் உபதேசியார் அவர்கள் அனுப்பிவைத்தார். இவர் தன் வீட்டிற்கு சுகத்தோடு பாதுகாப்பாக சென்று தன் வீட்டாரைக் கண்டார், தன் கிராமத்திலும் இவரது உடல் நலத்திற்காக பலவிதமான நாட்டு வைத்தியம் செய்தார்கள், இருப்பினும் பலன் எதுவும் கிடைக்கவில்லை, இவர் தன் நிலையைக் குறித்து மரியான் உபதேசியாருக்கு கடிதம் எழுதி தெரிவித்தார். அதிகமாக உடல் பாதிக்கப்பட்டு, மரணத்தின் வாயிலாக கடவுளிடம் செல்ல தயாரானார், தன் மனைவி பிரிசில்லா, தன் சகோதரி மற்றும் மாமியார் ஆகியோரை ஆண்டவருடைய பாதுகாப்புக்கும் பராமரிப்புக்கும் ஒப்புக்கொடுத்தார். இவர் தன் மரணத்திற்கு சற்று முன்னர் திருப்பணிகள் எவ்வாறு நடக்கின்றது என அறியவும், சகோதரர்கள் மற்றும் தேவ ஊழியர்களின் நலமறியவும் விரும்பி அருளப்பன் அவர்களுக்கு கடிதம் எழுதினார். அதற்கான பதில் கடிதத்தை பெறுவேன் என அவர் ஒரு நாளும் நினைக்கவில்லை,

அவர் உண்மையிலே விண்ணின் குடிமகனானார், கிறிஸ்துவின் அரசில் கிறிஸ்து இயேசுவினால் அவரது ஆசீர்வாதத்துடன் வரவேற்கப்பட்டிருப்பார். இவர் உயிரோடிருக்கும் காலத்தில் தன் மனைவி பிரிஸ்கில்லாவை கிறிஸ்துவின் திருச்சபையின் உறுப்பினராக நினைத்துக் கொள்ள வேண்டும் எனக் கேட்டு மகிழ்ச்சியுடன் 1858 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 25ஆம் தேதி தமது நித்திய வீட்டிற்குச் சென்றார். கிறிஸ்துவுக்குள் தனது நல்ல ஓட்டத்தை ஓடி முடித்து நீதியின் கிரீடத்தைப் பெறுவதற்காக கிறிஸ்துவில் இளைப்பாறுதலுக்குள் சென்றார்.

அக்குல்லா அவர்கள் இரட்சிக்கப்பட்டப் பின் சுமார் பத்து ஆண்டுகள் ஜெபம், அன்பு, விசுவாசம், நம்பிக்கை ஆகியவற்றில் தளராமல் உறுதியாக நின்றார், ஒரு நாளும் பின் நோக்கிப் பார்க்கவோ, மன உளைச்சலாகவோ, மன குறையுள்ளவராகவோ இருக்கவில்லை, இருந்ததுமில்லை.

## முதல் ஆத்துமாவை சம்பாதிக்க

# ஆறு ஆண்டுகள் உழைத்த முன்னோடி மிஷனறி

**மோஜோ**

மிஷனெரி

1830களில் இங்கிலாந்து தேசத்தில் கல் தச்சராக வேலை செய்துகொண்டிருந்த வில்லியம் பௌடனை தேவன் மிஷனரியாக அழைத்தார். வில்லியமும் அழைப்பிற்குக் கீழ்ப்படிந்து தன்னை மிஷனரியாக ஒப்புக்கொடுத்து, 1835ஆம் ஆண்டின் இறுதியில் ஜார்ஜ் பீர் என்பவரோடு இந்தியாவிற்குப் புறப்பட்டார். இந்தக் காலத்தில் இருப்பதுபோல் அந்தக் காலத்தில் பிரயாண வசதிகள் கிடையாது. இங்கிலாந்து தேசத்தில் இருந்து இந்தியா வரவேண்டுமென்றால் கடற்பிரயாணம் ஒன்றே வழி. புயல் காற்றிற்கும், வேறு பல விபத்துகளுக்கும் தப்பி நம் நாடு வந்து சேர எட்டு அல்லது ஒன்பது மாதங்களாகும். இப்படிப்பட்டக் கடுமையான பிரயாணம் செய்து, வில்லியம் மற்றும் பீர் இருவரும் 1836ஆம் ஆண்டு சென்னை துறைமுகத்தை அடைந்து, அங்கிருந்து தெலுங்கு நாட்டிலுள்ள மசூலிபட்டணத்திற்கு ஊழியம்செய்ய சென்றனர். அப்போது வில்லியமின் வயது வெறும் 23 மட்டுமே.

அதன்பின், இருவரும் நரசாப்பூர் என்னும் இடத்திலிருந்து ஊழியம் செய்தார்கள். டச்சு இல்லம் என்ற கட்டிடத்தில் அவர்கள் தங்கி வந்தார்கள். அது கதவும், ஜன்னல்களும் இல்லாமல் பாழடைந்த நிலையில் இருந்தது. மேலும், அந்தக் கட்டிடத்தை சுற்றியிருந்த பரந்த வெளியில் நினைவூட்டும் குறிகள் போல, பஞ்சத்தினால் மடிந்த மக்களின் எலும்புக்கூடுகள் கிடந்தன. அதற்குமுன், அப்பகுதியில் அடிவைத்து சுவிசேஷத்தை அறிவிக்க வந்த அனேக மிஷனரிகள், அவ்விடத்தில் பலவித இன்னல்களுக்குட்பட்டு, தங்கள் தாய்நாட்டிற்குத் திரும்பிப் போய்விட்டார்கள். ஆனால், வில்லியம், பீர் இருவரும் முன்வைத்த காலை பின்வைக்காமல் தொடர்ந்து ஊழியம்செய்தனர்.

வில்லியம் கிரமமாகத் தெருக்களிலும், வாரச் சந்தைகளிலும், மக்கள் கூடும் இடங்களிலும் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து வந்தார். ஆனாலும், முதல் ஆத்துமாவை சம்பாதிக்க அவர் ஆறு ஆண்டுகள் கடுமையாக உழைக்க வேண்டி இருந்தது. சற்று சிந்தித்துப் பாருங்கள்! ஆறு ஆண்டுகள் கனியின்றி ஊழியம்செய்வது எத்தனை கடினமான விஷயம்! கடுமையான முயற்சிகளுக்கு மத்தியிலும் ஆத்துமாக்கள் தேவனை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொள்ளாததால், ஒருமுறை வேதனையோடு அவர் தெருவில் முழங்காற்படியிட்டு, 'ஆண்டவரே, உம்முடைய வார்த்தை மக்கள் மனதில் வேரூன்றுவதாக,' என்று சத்தமாக ஜெபித்தாராம். அதன்பின், ஒருவார காலம் உபவாசித்து, ஆண்டவர் சமூகத்தில் காத்திருந்தார்.

அதன்பின்புதான், முதல் ஆத்துமா இயேசுவை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்டார். பாலகோல்லு நகரில் திருச்சபை உருவாக இதுவே தொடக்கப்புள்ளியாக அமைந்தது. இந்த சிறிய தொடக்கம் இன்று பல நூறு திருச்சபைகளாக வளர்ந்து நிற்கிறது. அந்தக் காலத்தில், உயர்சாதி மக்களைத் தவிர்த்து மற்ற சாதி மக்களில் படித்தவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். கல்விகற்ற சமூகத்தை உருவாக்க வேண்டும் என்ற தரிசனத்தோடு மிஷன் பள்ளிகளை உருவாக்கிய வில்லியம் இறுதிவரை உண்மையும், உத்தமுமாய் ஊழியம்செய்தார்.

அன்பான வாசகரே! ஆறு ஆண்டுகாலம் கடுமையாக உழைத்து முதல் ஆத்துமாவை சம்பாதித்த வில்லியம் பௌடனைப் பற்றி வாசித்தீர்கள். இவரைப்போன்று, வெளிநாட்டில் இருந்து இந்தியா வந்து கோதுமை மணிகளாய் விதைக்கப்பட்ட எண்ணற்ற மிஷனரிகளின் வாழ்க்கையைக் குறித்து சிந்தியுங்கள். மிஷனரிகள் தேவனை நேசித்ததால் இந்தியர்களாகிய நம்மை நேசித்தார்கள். மிஷனரிகளின் வாழ்க்கையை வெறுமனே வாசித்துவிட்டு கடந்துபோகாமல், இன்னமும் இருளில் இருக்கும் நம் தேச மக்களின் மீட்பிற்காய் செயல்பட நம்மை ஒப்புக்கொடுப்போம்!

நல் மீட்பர் ராஜ்யம் எங்குமே, சிரேஷ்ட பாக்கியம்
தங்குமே;
துன்புற்றோர் ஆறித் தேறுவார், திக்கற்றோர் வாழ்ந்து
பூரிப்பார்.

புகழ்பெற்ற

# சேலம் லண்டன் மிஷன் உயர்நிலைப் பள்ளி

ஜே. பர்னபாஸ்,
சேலம்




**அன்பும் சேவையும்** (Love and Service) :

**'சேலத்தில் முதன் முதலில் ஏற்படுத்தப்பட்ட உயர்நிலைப் பள்ளி என்று செவ்வாய்ப்பேட்டையின் பெரிய பள்ளிகூடமான லண்டன் மிஷன் ஹைஸ்கூலைச் சொல்லுவார்கள்'** என்று சேலம் வரலாற்றின் எழுத்தாளரான விட்டல் ராவ் தனது **'ஓர் அன்னாடுகாச்சியின் சேலம்'** என்ற நூலில் (பக்கம் 40 : பள்ளிக்கூடங்கள்) குறிப்பிடுகிறார். 'அன்பும் சேவையும்' 'Love and Service 'இந்த பள்ளியின் தாரக மந்திரம்' (Motto)ஆகும். அந்த காலத்தில் 'மிஷன் உயர்நிலைப் பள்ளி' என்று அழைக்கப்பட்ட இந்த 'சேலம் லண்டன் மிஷன் உயர்நிலைப் பள்ளி' (Salem London Mission High School) 1977ஆம் ஆண்டு தனது நூற்றாண்டை நிறைவு செய்தாலும், அதற்கான வேளை 1982ஆம் ஆண்டுதான் (3-12-1982) வந்தது. அப்பொழுது பள்ளியின் நூற்றாண்டுவிழா சிறப்பாக கொண்டாடப்பட்டது. இன்று CSI ஆண்கள் மேனிலைப் பள்ளி (CSI Boy's Higher Secondary School) என்று அழைக்கப்பட்டுவரும் இந்த பள்ளி ஏறத்தாழ தனது கல்விச் சேவையில் 150 ஆண்டுகளை கடந்திருக்கிறது. சேலம் வந்த முதல் சீர்திருத்த கிறிஸ்தவத் திருத்தொண்டர் சங்கை ஹென்றி கிறிஸ்பு ஐயர் (1827-28) கல்வி ஒளியையும், கிறிஸ்துவின் வழியையும், ஏற்றிவைத்த இந்த புண்ணிய பூமியான சேலம் மிஷன் வளாகத்தின் இடத்தில் தொடர்ந்து தனது கல்விச் சேவைகளை அன்புடன் செய்துவரும் பள்ளிக்கூடம் இது.




**சேலத்தின் முதல் கிறிஸ்தவ உயர்நிலைப் பள்ளி** :

சங்கை J. M. லெக்லர் ஐயருக்குப் பிறகு சேலம் மிஷனை வளர்ச்சிப் பாதைகளில் கொண்டுவந்து நிறுத்த அரும்பாடுபட்ட திருத்தொண்டர்களான சங்கை குட்ஃவ்

மாப்ஸ் ஐயர் (Rev. Goodeve Mabbs- period of service in Salem -1862-65 ), சங்கை W. E. மோரிஸ் ஐயர் (Rev. W. E. Morris -period of service in Salem -1865-69), மற்றும் சங்கை டாக்டர் மாரிஸ் பிலிப்ஸ் ஐயர் (Rev. Dr. Maurice Phillips - period of service in Salem -1869-84) ஆகியோர் சேலத்தில் ஒரு கிறிஸ்தவ உயர்நிலைப் பள்ளியைக் கொண்டு வரவேண்டும் என்ற எண்ணம் மேலோங்கியவர்களாகவே இருந்தனர். இதில் முன்னோடியாக சங்கை. G. மாப்ஸ் ஐயர் சேலம் லண்டன் மிஷன் வளாகத்தில் முதன் முதலாக ஆங்கில போதனா முறையைப் புகுத்தியதைச் சொல்லலாம். (Rev. G. Mabbs had already introduced the teaching of English into the compound Boy's School, and raised the standard) பிறகு சங்கை. டாக்டர் M. பிலிப்ஸ் ஐயர் அந்த ஆங்கில போதனா முறையை 10 ஆம் வகுப்பு வரையிலும் கொண்டுவந்தார். 1876 ஆம் ஆண்டு சேலம் அஸ்தம்பட்டி பகுதிக்கு அங்கு கட்டப்பட்டிருந்த ஆலங்குட்டை மிசியோன் பங்களாவிற்கு சங்கை பிலிப்ஸ் ஐயர் சென்றபோது காலியான சேலம் மிஷன் பழைய பங்களாவில் சங்கை ஹென்றி ரைஸ் ஐயர் (Rev. Henry Rice -period of service -1873-76) சேலத்தின் முதல் கிறிஸ்தவ உயர்நிலைப்பள்ளியைத் தொடங்கினார்.

**சேலம் லண்டன் மிஷன் உயர்நிலைப் பள்ளியின் உருவாக்கத்தில் உழைத்த திருத்தொண்டர்கள் :**

ஏற்கெனவே சேலத்தில் ஜில்லா பள்ளிக்கூடம் (Zilla School) துவக்கப்பட்டுவிட்ட நிலையில் மேலும் ஒரு பள்ளி அதற்கு போட்டியாக தேவையற்றது என அன்றைய ஆங்கில அரசாங்கம் எந்தவித நிதிஉதவிகளையும் செய்ய மறுத்தது. இந்த நிலையில் சங்கை. ரைஸ் ஐயரும் உடல்நலக் குறைவால் தாய்நாடு திரும்பும்படி நேர்ந்தது. இப்பொழுது சேலம் மிஷன் நிர்வாகத்தில் தனியாக நின்ற சங்கை. பிலிப்ஸ் ஐயருக்கு உதவியாக சங்கை G. O. நியூபோர்ட் ஐயர் (Rev. G. O. Newport - period of service in Salem -1877-81) 1877ஆம் ஆண்டு பள்ளிக்கூடத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். சங்கை G. O. நியூபோர்ட் ஐயரும், சங்கை பிலிப்ஸ் ஐயரைப் போலவே சங்கை J. M. லெக்லர் ஐயரின் மற்றொரு மகளான ரோசா மேட்செல் (Miss. Rosa Matchell) அம்மையாரை திருமணம் செய்திருந்தார். சங்கை G. O. நியூபோர்ட் ஐயர் ஒரு தமிழறிஞர் மட்டுமல்லாமல் ஒரு வேதசாஸ்திர கல்லூரி பேராசானும் ஆவார். மேலும் சங்கை லீ மாரி ஐயர் (Rev. Le Mare ), சங்கை W. இராபீன்சன் ஐயர் (Rev. W. Robinson), மற்றும் சங்கை. A. A. திக்னம் ஐயர் (Rev. A. A. Dignum) ஆகியோர் சேலம் லண்டன் மிஷன் உயர்நிலைப் பள்ளியின் முன்னேற்றத்திற்காக கடுமையாக உழைத்தவர்கள்.

**தலைமையாசிரியர் திரு. P. சுந்தரம் :**

சங்கை வில்லியம் இராபீன்சன் ஐயர் காலத்தில் திரு. P. சுந்தரம் ஒரு புதிய தலைமையாசிரியராக ஐயருடன் இணைந்து பள்ளிக்கூடத்தின் முன்னேற்றத்தில் தீவிரமாக உழைத்தார். (Rev. W. Robinson and the new headmaster, P. Sundaram, set to work vigorously to put its affairs in order) இந்த பள்ளியை சென்னை இராஜதானியிலே புகழ்பெற்ற பள்ளியாக உயர்த்தியதில் இவரது பங்கு சிறப்பானது. (Mr. P. Sundaram was greatly respected in Salem, many of whose leading citizens had been his students and revered his christian character. Whatever improvements the future may see in the school will be based on the fine work he was able to accomplished) 1924ஆம் ஆண்டு இவரது மரணம் சேலத்தில் ஒரு முக்கியச் செய்தியாக இருந்தது.

**தலைமையாசிரியர் திரு. V. வேதநாயகம் :**

திரு. P. சுந்தரம் அவர்களின் மறைவிற்குப் பின்பு திரு. V. வேதநாயகம் தலைமையாசிரியராகவும், சங்கை பொ்னாட்



தாமஸ் ஐயர் (Rev. Bernard Thomas) உயர்நிலைப் பள்ளியின் முதல்வராகவும் சிறப்பாக செயல்பட்ட காலங்கள் ஒரு பொற்காலம் என்றே சொல்லலாம். அப்பொழுது மாணவர்கள் தங்கி படிக்க பள்ளி வளாகத்தில் விடுதி வசதிகள் சிறப்பாக செய்துகொடுக்கப்பட்டிருந்தது. சங்கை பெர்னாட் தாமஸ் ஐயர் தனது துணைவியார் திருமதி. ஸ்ட்டிரிட்டர் அம்மையாருடன் பள்ளி வளாகத்திலே தங்கியிருந்து விடுதி மாணவர்களையும், பள்ளிக்கூடத்தின் செயல்பாடுகளையும் கண்ணும் கருத்துமாக பாதுகாத்து வந்தனர்.



**நூற்றாண்டு விழா மலரிலிருந்து. . .**

லண்டன் மிஷன் உயர்நிலைப் பள்ளிக்கூடத்தின் நூற்றாண்டு மலரில் முன்னாள் மாணவர் திரு. இரா. சிங்காரம் தந்த தங்கவரிகள்.

'கேது பாம்பால் கெடும் சந்திரனையும், சாது பெண்ணால் கெட்ட இந்திரனையும், அறிந்த எங்களுக்கு - அரிவாளையும், சுத்தியலையும் சுழற்றிய லெனின் வாழ்வையும், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் சொல்லிய வால்டையர் வரலாற்றையும் - அரிஸ்டாட்டில் முதல் காந்திவரை சொன்னதால் - திருமணிமுத்தாற்றின் பையன்களாகிய எங்களை - தேம்ஸ்நதிக் கரை மாணவர்களாக்கியது - ஜேம்ஸ் ஆசானின் மேலை நாட்டுப் பாடங்களே!

- ☐ கீழ்பாச்சு வேஷ்டி கட்டி மேல்நாட்டுக் கணிதம் கற்பித்தவர் ராவ்!
- ☐ **ஒரு கால்டுவெல் அய்யரே சந்திர மௌலியார் - தந்திரமாக தினம்தினம் மந்திரமாக - எம் நெஞ்சில் சுந்தரத் தமிழை சுழலவிட்டதை மறந்திடத்தான் முடியுமா?**
- ☐ பாலையா ஆசானின் பழைய வரலாற்றுப் பாடவகுப்பு - பாலைவனத்து லைலா மஜ்னுவை சோலை வனத்து சுந்தரர்களாக்கியது.
- ☐ பழைய ஏற்பாட்டை புதுமை மெருகுடன் சொன்ன தேவதாஸ்!
- ☐ மேய்ப்பராக இருந்த ஆசிரியர் தானியேல் !
- ☐ நல்வழிக் காட்டி விளையாட்டிலும் விவேகத்தை விதைத்த வேதமாணிக்கம்! - இப்படி உயர்வான ஆசான்கள் பலர் - வாழ்க லண்டன் மிஷன் பள்ளி! '

இந்த பள்ளியிலே தங்கள் சிறந்த சேவையில் இன்றும் நினைக்கப்படும் சங்கை T. C. விட்னி ஐயர், சங்கை ஹேட்ச் ஐயர், சங்கை D. P. காலின்ஸ் ஐயர், திரு. S. C. பெர்கஸ், திரு. லூக் தேவபிரியம் போன்றோர். மாணவர்கள் மத்தியில் இன்றும் நினைக்கப்படும் திரு. கிராபோர்ட், திரு. திருமலை ஐயங்கார், திரு. நாகராஜ ராவ், திரு. S. A. ஜேம்ஸ், திரு. P. செல்லதுரை, திரு. P. தேவசகாயம், திரு. வெங்கடராம ஐயர், திரு. யூசுப் அலிகான் ஆகியோர். 'பிற்காலத்தில் CSI ஆண்கள் மேனிலைப் பள்ளி என்று பெயர் மாற்றம்பெற்ற இந்த பள்ளியின் தாளாளர்களாக பணியாற்றிய திரு. சற்குணம், திரு. கிராஸ் தேவசகாயம், திரு. அப்சலோம் ஏசுடியான், திரு.B.ராய் லாசரஸ், டாக்டர் திலக் கிருபா, மற்றும் திரு.இராபர்ட் கிறிஸ்டோபர் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். 'விளக்குகள் பேசாது அவை ஒளிவீசும் என்பதுபோல் இங்கு சொல்லப்படாத எண்ணற்றோர் சிறிதானதோ பெரிதானதோ தாங்கள் பெற்ற பணியை சிறப்புடன் செய்து உத்தம ஊழியர்களாகத் திகழ்கிறார்கள்.

**கல்விச் சேவையில் அன்புடன். . .**

இன்று தென்னிந்திய திருச்சபை ஆண்கள் மேனிலைப் பள்ளியாக சேலம் செவ்வாய்ப் பேட்டை பகுதியில் கல்வி ஒளிவீசும் கலங்கரை விளக்கமாக திகழும் இப்பள்ளியின் தலைமையாசிரியராக திருமதி. பியூலா ரூபி அவர்களும், தாளாளராக திரு. சாமுவேல் சிவானந்தமும் இந்தப் பள்ளியை அதன் 150ஆம் ஆண்டு நிறைவை நோக்கி வழிநடத்தி வருகிறார்கள்.

கடந்த 17-2-2020 அன்று தங்களது தாத்தா சங்கை T. C. விட்னி ஐயரின் அடிச் சுவடுகளைத் தேடி சேலம் வந்த இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த திருமதி பென்னி ரிலி ஸ்மித் அம்மையார், மற்றும் அவரது சகோதரர் திரு. சைமன் விட்னி ஆகியோர் அன்றைய சேலம் லண்டன் மிஷன் பள்ளியான இன்றைய CSI ஆண்கள் மேனிலைப் பள்ளியில் தங்கள் தாத்தா மேனேஜராக பணிசெய்த இடத்தை வந்து பார்த்து அதிசயித்த போது.

# அமலா தயாபரா அருள் கூரையா..

தஞ்சை வேதநாயகம் சாஸ்திரியார் அவர்களால் கி.பி. 1811 - ஆம் வருடம் இந்த கீர்த்தனை இயற்றப்பட்டது. இது சாஸ்திரியாருடைய ஞானப் பதக் கீர்த்தனைகள் புத்தகத்தில் 208 - வது கீர்த்தனையாக இடம்பெற்றுள்ளது. CLS சங்க வெளியீடான கிறிஸ்தவ கீர்த்தனைகளில் (பதிப்பு 2008) 12 - வது பாடல். இந்த கீர்த்தனை வெண்பா, பல்லவி மற்றும் 8 சரணங்களைக் கொண்டுள்ளது. ரீதி கௌளை (Reethi Gowlai) இராகம், ஆதி தாளம்.

கடவுளின் தத்துவத்தை குறித்தும், திரித்துவத்தை முன்னிறுத்தியும் இதில் பாடப்பட்டுள்ளது. குறிப்பாக இதன் முதல் சரணம் இந்திய இறைத் தத்துவத்தை கிறிஸ்துவில் வைத்து பாடப்பட்டுள்ளது. வேதநாயகம் சாஸ்திரியார் தனது பெரும்பான்மை படைப்புகளில் இறைத்தத்துவ கருத்துக்களை முன்னெடுத்து, அதில் கிறிஸ்தவத்தை உள்நாட்டுமயமாக்கல் நோக்கிலும் (தன்னிலைமயமாக்கல் அதாவது தமிழ் மரபு (Christology in Indigenisation), கிறிஸ்தவத்தை இந்தியமயமாக்கல் (Christology in Indianisation) அடிப்படையிலும் வெளிப்படுத்துவார். அந்த வகையில் இந்த கீர்த்தனை இறை தத்துவம் நிறைந்த பாவாக அமைந்துள்ளது.

**வெண்பா**

ஆதியந்தம் இல்லான் மாறாதான் சருவ வல்லோன்
ஏதும் அறிந்தோன் அளவிலா ஞானன் - ஓதுமிடம்
எங்கும் நிறைந்தோன் சத்தியன் தூயன் நீதியுளோன்
அங்கிருபை யாளன் அமலன்.

இராகம்: **ரீதி கௌளை**
தாளம்: **ஆதி தாளம்**

**பல்லவி**

அமலா தயாபரா அருள் கூரையா குருபர
அமலா தயாபரா அருள் கூரையா.

**சரணங்கள்**

1. சமையம் ஈராற் ஓராறு சாஸ்திரங்கள் வேதம் நான்கும்
அமையும் தத்துவம் தொண்ணூற்றாறு(ம்) ஆறுங் கடந்த.- அமலா...
2. அந்தம் அடி நடுவிலாத தற்பரன் ஆதி
சுந்தரமிகும் அதீத சோதிப் பிரகாச நீதி. - அமலா...
3. ஞானத்திரவிய வேத நன்மைப் பரம போத
வானத் தேவப் பிரசாத மகிமைக்கு அளவில்லாத. - அமலா...
4. காணப்படா அரூப கருணைச் சுய சொரூப
தோணப்படா வியாப சுகிர்தத் திருத்தயாப. - அமலா...
5. சத்திய வசன நேயா சமஸ்த புண்ணிய சகாயா
கர்த்த தத்துவ உபாயா கருணை பொழியும் வாயா. - அமலா...
6. எல்லை இல்லா மெஞ்ஞான ஏக பராபர வஸ்தான
சொல்லரிதாம் நிதான துல்லிபத்தொன்றாம் மேலான. - அமலா...
7. கருணாகரா உபகாரா தராதரா
பரமேசுரா கிருபாகரா சருவேசுரா. - அமலா...
8. ஆதியொன்றான மூவா அற்புதவாச ஏயோவா
வேதநாயகன் பாவா மேலாந் திரித்துவ தேவா. - அமலா...

**சொற்பொருள்:**

**வெண்பா**

தூ ஏதும் - மூலம், ஆதி, யாதொன்றும், எல்லாமும்
தூ ஞானன் - கடவுள்
தூ ஓதுமிடம் - மன்றாடுமிடம்
தூ அங் - அங்கு - அவ்விடம்
தூ அமலம் - அழகு, புனிதம், வெண்மை
தூ அமலன் - பரிசுத்தன், கடவுள்

**பல்லவி**

தூ அமலா - கடவுளே, பரிசுத்தரே
தூ தயாபரா - கிருபையுடைய கடவுளே
தூ குருபரன் - பரமகுரு, பரத்தின் குரு, கடவுள்

**சரணங்கள்**

1. தூ சமையம் - சமயம் - மதம்
தூ ஈராறு - இரண்டு ஆறு 6+6 - எண்ணிக்கை (2-6=12)
தூ ஓராறு - ஒரு ஆறு - அதோடு கூடுதலாக ஒரு ஆறு - எண்ணிக்கை (+6)
தூ சாஸ்திரங்கள் - ஒழுங்கு, கட்டளை, வேதம்
தூ ஆறு - வழி, ஒழுக்கம், பாதை

2. தூ அந்தம், அடி, நடு - முடிவு, ஆதி, நடு (முதலுக்கும் முடிவுக்கும் இடைப்பட்டது)
தூ தற்பரன் - கடவுள், பரம்பொருள்
தூ ஆதி - அதிசயம், எப்பொருட்கும் இறைவன், தொன்மை, பழைமை
தூ அதீதம் - எட்டாதது, கடந்தது, மேற்பட்டது

3. தூ ஞானத்திரவியம் - அருள் மருந்து, கடவுளின் அருள், கொடை, பாக்கியம்
தூ பரம போதம் - பரத்தின் போதனை, இறை வார்த்தை
தூ வானத் தேவ பிரசாதம் - வானத்திலிருந்து கிடைத்த கடவுளின் உணவு. (ஜீவ அப்பம் நானே. யோவான் 6: 48., வானத்திலிருந்து இறங்கின ஜீவ அப்பம். யோவான் 6: 51.)

4. தூ காணப்படா அரூபி - காணப்படாத வெறுமை (உருவம் இல்லாமை)

தூ சுய சொரூபி - தானாய் இருக்கும் உருவம் (உருவம் உள்ளவர்)
தூ தோணப்படா - தோன்றப் பெறாத உருவம், எங்கும் நிறைந்தது.
தூ வியாபம் - வியாபகம் - வியாபித்தல், எங்கும் இருப்பது, சுய தன்மை
தூ சுகிர்தம் - நன்மை, இன்பம், புண்ணிய பலன்
தூ தயாபம் - அருள் நிறைந்த, இரக்கமுள்ள

5. தூ நேயா - நண்பா, நேசன்
தூ சமஸ்தம் - ஆதாரம், எல்லை
தூ சகாயம் - உதவி
தூ கர்த்தத்துவம் - அதிகாரம், தெய்வத் தன்மை, சகலத்தையும் நடத்துகிற தத்துவம். ('கர்த்தத்துவம்' என்ற சொல் தமிழ் திருமறையில் ஏசாயா 9: 6, தானியேல் 4: 22, 4: 34, 6: 26, 7: 14. ஆகிய இடங்களில் வருகிறது. இதன் ஆங்கில மொழிபெயர்ப்பில் Government, Dominion, Sovereignty என்ற ஆங்கில சொற்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.)
தூ உபாயம் - செயல்படுத்தும் வகை
தூ கருணை பொழியும் வாயா - கருணை நிறைந்த வார்த்தையை தரும் வாயை உடையவர்.

6. தூ ஏகபராபர வஸ்து - ஒரு பொருளாகிய ஒரே பராபரன்
தூ சொல்லரிதாம் - சொல்ல இயலாத, சொல்லால் உணர்த்தமுடியாத
தூ நிதானம் - ஆதிகாரணம், நேர்மை
தூ துல்லிபம் - மேன்மை

7. தூ உபகாரா - உதவுவோன், நன்மை செய்வோன்
தூ தராதரா - உயர்வு தாழ்வு வேற்றுமை கொள்ளாதவர்
தூ பரமேசுரா - பரத்தின் தலைவன், கடவுள்
தூ கிருபாகரா - அருளுக்கு இருப்பிடமானவரே, கிருபையுடையவரே,
தூ சருவேசுரா - சருவ வல்லோன், எல்லா உயிர்க்கும் தலைவனாகிய கடவுள்

8. தூ ஆதியொன்றான மூவா - ஆதிமுதல் ஒன்றாயிருக்கும் பிதா, குமாரன், பரிசுத்தாவியாகிய மூவொரு (மூன்றும் ஒன்றான) கடவுள்
தூ அற்புதவாசன் - அற்புதம் செய்பவர்
தூ ஏயோவா - யேகோவா - நித்திய ஜீவனுள்ளவர், இருக்கிறவராக இருக்கிறவர் (யாத்திராகமம் 3: 14)
தூ பாவா - பாட்டுக்கு உரியவர்
தூ மேலாந் திரித்துவ தேவா - எல்லாவற்றுக்கும் மேலாக திரித்துவத்தில் (மும்மை தன்மை) இயைந்திருக்கும் கடவுள்.

**பொருள் விளக்கம்:**

**வெண்பா**

தொடக்கமும் முடிவும் இல்லாதவர், மாறாதவர், எல்லா வல்லமையும் உடையவர், எல்லாம் அறிந்தவர், அளவில்லா பெருத்த ஞானமுள்ளவர் - பெயர் சொல்லி அழைக்கும் இடமெங்கும் நிறைந்திருப்பவர், உண்மையுள்ளவர், தூயர், நீதியுள்ளவர், அவ்விடத்து கிருபையுள்ளவர், பரிசுத்தர்.

**பல்லவி**

பரிசுத்தரே கிருபையுள்ள கடவுளே அருள் செய்யும், பரத்தின் குருவே பரிசுத்தரே இரக்கமுள்ளவரே அருள் செய்யும்.

**சரணங்கள்**

1. சமயங்கள் பதினெட்டும் (18), சாஸ்திரங்களாகிய வேதங்கள் நான்கும் (4), அமைந்த தத்துவங்கள் தொண்ணூற்று ஆறும் (96) ஆகிய இவைகள் கூறும் வழிகளை (பாதைகள்) எல்லாம் கடந்து நிற்பவர். - அமலா தயாபரா...
(இந்த கவியின் கூடுதல் விளக்கத்தை இறுதியில் கொடுத்திருக்கிறேன்.)
2. முடிவும் தொடக்கமும் அதற்கு நடுவாகவும் இல்லாத அதிசயமான பரம்பொருள், மிகுந்த அழகுடன், எல்லாவற்றிலும் மேலான தன்மை கொண்ட சுடரில் எழும் வெளிச்சமாகிய நீதி. - அமலா தயாபரா...
3. வேதம் தரும் நன்மை நிறைந்த பரம போதனை, ஆத்தும அருமருந்து. அளவில்லாத மகிமைக்கு உகந்த வானத்தின் தெய்வீக உணவு. (யோவான் 6: 48, 51, 58) - அமலா தயாபரா...
4. காணப்படாத உருவமற்றவரே, கருணையை தன் வடிவாக கொண்டவரே, கண்கள் காண தோற்றம் கொள்ளாத எங்கும் வியாபித்து நிறைந்திருக்கும் நன்மையாக விளங்கும் தெய்வீக அருள் நிறைந்த. - அமலா தயாபரா...
5. சத்திய வசனமாகிய நண்பா, எல்லா நற்செயல்களுக்கும் துணைவா, கடவுளின் தன்மையை விளங்கச் செய்பவரே, கருணை நிறைந்த வார்த்தையைத் தரும் நாவை உடையவரே. - அமலா தயாபரா...
6. எல்லையற்ற மெய்ஞானமுள்ள ஒரே பொருளான பராபரன், சொல்லால் உணர்த்தமுடியாத ஆதிகாரணர், மேன்மைகளுக்கெல்லாம் ஒரே மேலான - அமலா தயாபரா...
7. கருணையுள்ளவரே, உதவுபவரே, தகுதி மிக்கவரே, பரலோகின் தலைவரே, அருள் தருபவரே, எல்லா உயிர்க்கும் தலைவனாகிய கடவுளே - அமலா தயாபரா...
8. தொடக்கமுதல் மூன்றில் (பிதா, குமாரன், பரிசுத்தாவி) ஒன்றாயிருக்கும் கடவுளே , அற்புதம் செய்பவரே, நித்திய ஜீவனுள்ளவரே, வேதநாயகன் பாட்டுக்கு உரியவரே, எல்லாவற்றுக்கும் மேலாக திரித்துவத்தில் இயைந்திருக்கும் கடவுளே - அமலா தயாபரா...

**கூடுதல் விளக்கம்:**

**சரணம் 1.**

சமையம் ஈராறு ஓர் ஆறு சாஸ்திரங்கள் வேதம் நான்கும்
அமையும் தத்துவம் தொண்ணூற்று ஆறும் ஆறும் கடந்த.

1. சமையம் ஈராறு ஓர் ஆறு
தூ சமையம் - சமயம்
தூ ஈராறு - 2 * 6 = 12
தூ ஓர் ஆறு - 6
சமயங்கள் மொத்தம் 18. (2*6+6=18) (18 சமயங்களை

கடைசியில் கொடுக்கிறேன்.)

2. சாஸ்திரங்கள் வேதம் நான்கும்
தூ சாஸ்திரம் - வேதம்

**நான்கு வேதங்கள் :**

i. இருக்கு (ரிக்) ( Rig veda )
ii. தைத்ரியம் ( யசூர் ) ( Yajur veda )
iii. சாமம் ( Sama veda )
iv. அதர்வணம் ( Atharva veda )

3. அமையும் தத்துவம் தொண்ணூற்று ஆறும்
தத்துவங்கள் 96.
4. ஆறும் கடந்த
தூ ஆறு - ஒழுக்கம் , வழி, பாதை

**பொருள் விளக்கம் :**

சமயங்கள் பதினெட்டும் (18), சாஸ்திரங்களாகிய வேதங்கள் நான்கும் (4) , அமைந்த தத்துவங்கள் தொண்ணூற்றி ஆறும் (96) ஆகிய இவைகள் எல்லாம் கூறும் வழிகளையெல்லாம் கடந்து நிற்பவர் ....

**18 சமயங்கள் :**

(I) சைவம் , வைஷ்ணவம் , சாதிதம் , சௌரம் , காணபத்தியம் , கௌமாளம் - இவை வைதிக மதம் எனப்படும்.

(II) கபில மதம் , கணாத மதம் , பதஞ்சலி மதம் , அக்ஷபாத மதம் (க்ஷ - க் + ஷ ) , வியாச மதம் , ஜைமினி மதம் - இவை வேதாந்த மதம் எனப்படும்.

(III) பௌத்தம் , ஜைனம் , பைரவம் , காளாமுகம் , உலோகாயதம் , சூனிய வாதம் - இவை புறச் சமயம் என்பர் வைதிகர்.

**96 தத்துவங்கள் :**

1. ஆன்ம தத்துவம் - 24.
2. உடலின் வாசல்கள் - 9.
3. தாதுக்கள் - 7.
4. மண்டலங்கள் - 3.
5. குணங்கள் - 3.
6. மலங்கள் - 3.
7. வியாதிகள் - 3.
8. விகாரங்கள் - 8.
9. ஆதாரங்கள் - 6.
10. வாயுக்கள் - 10.
11. நாடிகள் - 10.
12. அவத்தைகள் - 5.
13. ஐவுடம்புகள் - 5.

இந்த 96 தத்துவங்கள் ஒவ்வொன்றாக விரித்துரைத்தால் இன்னும் விரிந்து செல்லும். ஆகையால் இத்துடன் விரிவுரையை நிறைவு செய்கிறேன்.

பரமன் பணியில்,

**சங்கை. சை. நோவா சாஸ்திரியார்**
**தஞ்சாவூர்.**

# 106 ஆண்டுகளைக் கடந்த இசைத்தட்டு

**பேரா.P.குட்டி ஜாஸ்கர்,**
போப் கல்லூரி. சாயர்புரம்.




இருபதாம் நூற்றாண்டு ஆரம்பத்தில் (1900-1931) தமிழகத்தில் கர்நாடக சங்கீத பாடல்களே இசை தட்டுகளாக வெளிவந்தன. பின் நாடகங்களை இசைத்தட்டுகளில் பதிவுசெய்து வெளியிடும் முயற்சியில் கொலம்பியா இசை தட்டு நிறுவனமும் வேறு சில நிறுவனங்களும் ஈடுபட்டன. அப்போது பாடல்களைக் கேட்பதற்கு மட்டும் இசைத்தட்டுகள் என்ற நிலைமாறி, நாடகங்களைக் காதால் கேட்கலாம் என்றும் இவை வந்தன. அந்தக் காலத்தில் சென்னையில் இயங்கிய ஹட்சின்ஸ் (Hutchins) கம்பெனி, சரஸ்வதி ஸ்டோர்ஸ் (Saraswathi Stores), ஓர்ஸ் கொலம்பியா ஹவுஸ் (Columbia), ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ் (His Masters Voice), ஷைனிங் ஸ்டோர்ஸ் ஸொஸைட்டி (Shinin Store Societies), ட்வின் (The Twin) கம்பெனி என கிராமபோன் கம்பெனிகள் நாடகத் தட்டுகளை வெளியிட்டன.

ட்வின் கம்பெனி நல்ல சமாரியன், பவுல், ஏழை லாசருக்கு மோட்சம், கிறிஸ்துவின் ஜனனம் என்னும் விவிலியக் கதைகள் தட்டு நாடகங்களாக வெளியிடப்பட்டன. இந்த நாடகங்களில் பாடல்களைப் பாடிய சேலம் சாமுவேல் சந்திரசேகர், ஞானசேகர், ஆர். ஜோசப் போன்றோர் கர்நாடக சங்கீதம் முறையாகப் படித்தவர்கள்.

இந்த வரிசையில் 1917 ஆம் ஆண்டு H M V இசைத்தட்டில் திரு. T.ஐயாத்துரை பாகவதர் அவர்கள் **'இவரே பெருமான்'** என்ற பாடலை தானே இயற்றி, தானே இசை அமைத்து, தானே பாடி இசைத்தட்டில் 106 வருடங்களுக்கு முன் பதிவேற்றம் செய்து வெளிவந்த ஒரு இசைத்தட்டு எனக்கு கிடைத்தது. மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். என்னுடைய தமிழ் கிறிஸ்தவ இசைத்தட்டுகள் ஆராய்ச்சி படி இந்த இசைத்தட்டு தான் இரண்டாவது வந்த கிறிஸ்தவ இசைத்தட்டு. அந்த இசைத்தட்டுக்கு பின் 1930, 1940 களில் பாகவதர் வேதநாயகம் சாஸ்திரியார், D.A.ஆர்தர் பாகவதர், ஆபிரகாம் பண்டிதர் மகன் A. ஜோதி பாண்டியன் ஆகியோரது இசைத்தட்டுகள் வெளிவந்தன.

திரு T. ஐயாத்துரை பாகவதர் அவர்கள் நம் கீர்த்தனை நூலில் அருமையான இறையுணர்வு மிக்க நான்கு பாடல்களை எழுதியுள்ளார். இவர் எழுதிய பாடல்கள்:

1. **'விண்மணி பொன்மணி வித்தக மணியே'**
2. **'கண்களை ஏறெடுப்பேன்'**
3. **'இவரே பெருமான்'**

### 4. 'அருமருந்தொரு சற்குரு மருந்து' என்பன

ஐயாத்துரை பாகவதர் அவர்கள் கயத்தாறு என்ற ஊரைச் சேர்ந்தவர். அவருடைய இறையன்பும், இறையுணர்வும், புலமையும் இவரின் பாடல்களின் வழியாகவே அறிய முடிகின்றது. ஐயாத்துரை அவர்களின் குலத்தினர், திருவைகுண்டத்தில் தங்களுக்கென்று ஒரு கோட்டையைக் கட்டி, அதற்குள்ளிருந்து பெண்கள் வெளியே வரக் கூடாதென்ற கண்டிப்பான வழக்கத்தைக் கொண்டவர்கள். சென்ற நூற்றாண்டு வரை இவ்வழக்கத்தைக் கடைப்பிடித்துள்ளனர். ஐயாத்துரை பாகவதர் அவர்கள் தொடக்கக் காலத்தில் சீர்திருத்தச் சபையில் இருந்தவர், பின்னர் கத்தோலிக்கத் திருச்சபைக்கு மாறியுள்ளார்.



பயண வாகன வசதிகள், சாலை வசதிகள் இல்லாத காலத்தில் தங்கள் ஊர்களிலிருந்து இனிமையான பாடல்களைப் பாடிக் கொண்டு கால் நடையாகவே நடந்து செல்லுவார்கள். திருமறை நூலில் சங்கீதப் புத்தகத்தில், பயணப் பாடல்களாக மலை எறும் போது 120 முதல் 135 வரையிலான சங்கீதங்களைப் பாடுவார்கள். இச்சங்கீதங்களை எறும் வரிசை அல்லது ஆரோகண சங்கீதங்கள் என்று அழைப்பர். ஐயாத்துரை பாகவதர் அவர்கள் சிறப்பாக 121 ஆம் சங்கீதத்தை அடிப்படையாகக் கொண்டு. **'கண்களை ஏறெடுப்பேன்'** என்ற பாடலை எழுதியுள்ளார். விண்ணையும், மண்ணையும் படைத்த இறைவனிடமிருந்து எண்ணி முடியாத நன்மைகள் எணக்கு வரும் என்ற நம்பிக்கையும், காலையும், மாலையும் கண்ணுறங்காமல் காப்பார் என்ற உறுதியும், துன்பம் என்னை வருத்தாமல் காக்கும் நிழல் என்ற அடைக்கலமும்; எல்லாத் தீமைகளிலிருந்தும் விலக்குவார் என்ற பலமும் எனக்கு அவரே என்று உணர வைக்கின்றார்.




மேலும் இவர், இயேசு பெருமான் ஒருவரே உலகில் பெரியவர் மற்று யாரும் இவருக்கு ஒப்பாகக் கூற முடியாது என்று உறுதியுடன் கூறியுள்ளார். இந்த உலகத்தின் மீது நமக்கு மிகவும் சொந்தமான உரிமையுடையவர். **பாவமாகிய இருளை நீக்கும் ஒளியாவார்** இறைவன் இருக்கும் இடத்திற்குச் செல்லும் வழியாவார்: பல நோய்களை நீக்குவார், சொல்லுவதில் வல்லமை மிக்கவர். வேறுபாடு கருதாமல் எல்லா மக்களுக்கும் உதவி செய்பவர். பாவத்தை விடுபவர்களுக்கு அருள் அளிப்பவர். விண்ணுலகில் வாழும் இறைமைந்தன், உலகினில் மக்களுக்கு நன்மை செய்வதற்காகவே பிறந்தவர் உலகிலேயே உயர்ந்த பொருளாகிய உயிரைச் சிலுவையில் தந்த தியாகி என்று அருமையான கருத்துக்களை '**இவரே பெருமான்**' என்ற பாடலில் அடுக்கியுள்ளார்.

மேலும் இவர் இறைவனை '**விண்மணி, பொன்மணி**' என்று கூறியுள்ளார். இறைவன் '**அருமையான மருந்து, போதக மருந்து**' என்று புகழ்ந்து பாடியுள்ளார். இப்படிச் சிறந்த கீர்த்தனைகளை எழுதித் திருச்சபை மக்களுக்குத் தந்த ஐயாத்துரை பாகவதர் அவர்கள் 1948 ஆம் ஆண்டு தம் 64 ஆம் வயதில் இறைவனடி சேர்ந்தார்.




கடவுள் நம் அனைவரையும் ஆசீர்வதிப்பாராக !!!!!!

நன்றி : **'கவிஞர்களின் வாழ்க்கையில் கீர்த்தனைகள்'** டாக்டர்.சே.சுந்தரராசன் ஐயாத்துரை பாகவதர்

படம் :சகோதரி விமலா ஆல்பர்ட் (ஐயாத்துரை பாகவதர் பேத்தி )



அத்தியாயம் 15

# புரட்சிப்புயல் ஏமிகார்மைக்கேல்

**முனைவர் ஜான்சி பால்ராஜ்,**
ஆசிரியர் , திருநெல்வேலி

**ஏமிகார்மைக்கேல்**

புழுக்கத்தைத் தணிக்க விசிறி விடும் பச்சை ஓலைகளுக்கும் வியர்த்துக் கொட்டும், இந்த சித்திரை மாதத்தில், ஆடாமல் அசையாமல் நின்று என்னத்தைதான் யோசிக்கின்றனவோ கிளைகளற்ற இந்தக் கரிய மரங்கள்...!?

பத்து வருசத்துக்கு முன்னால இந்த இடத்தில் வெறும் பனைகள் தான் அடர்ந்திருந்தது மருது. பயினி காய்க்க போடப்பட்ட விடிலிகள் தான் ஆங்காங்கே இருக்கும். ஆனா இப்ப சில வருசமா இங்கயே குடியிருக்கவும் ஆரம்பிச்சிட்டாங்க. இவுங்க எல்லாருமே வடக்கூர் மக்கள் தான். இந்தக் குடிசைகள் எல்லாமே இப்ப ஒருசில வருசமா வந்தது தான். நான் எப்பவும் இங்கதான் வெளையாடுவேன். எங்க பாத்தாலும் இந்த பங்குனி, சித்திரையில குடங்குடமா பயினி இறக்கி காய்ப்பாங்க. எனக்கு பனையடிவாரத்தில நின்னு பயினி குடிச்சாதான் குடிச்சமாறி இருக்கும். நெதமும் வெள்ளனேயும் கருக்கல்லேயும் இங்க தான் வந்து கிடப்பேன். என்னோடு ஒரு பெரிய எடக்குப் பட்டாளமே இருக்கும். இந்தப் பனை மரங்களின் சலசலப்பும், பயினியின் கமகமப்பும், அதை காய்க்கும் போது வரும்பாரு.... ஒரு வாசம், இது மூணு மைலுக்கு அங்கால இருந்தாலும் மூக்கைத் தொளைக்கும். அத்தோடு ஆங்காங்கே புகைந்து கொண்டிருக்கும் பெரிய பெரிய பயினி அடுப்புகளும் எனக்கு பிடித்து போன ஒன்று.

சில பனைகளில் இருந்து கள்ளு இறக்குவாங்க... அந்தப் பக்கமே போவக்கூடாதுன்னு எங்க ஐயா சொல்லி அனுப்புவாறு. நானும் கொஞ்ச காலம் அவரு பேச்சை மதிச்சி போகாமல் தான் ந்தேன்.

ம்…பெறவு..? சிரித்தபடியே கேட்டான்… மருது.

இருவரும் பாலிய சினேகிதர்கள். இரண்டாம் சொக்கார உறவுமுறையில் சகோதரர்கள். ஒரே வயதென்றாலும் சுப்பு மூத்தவன். தொடக்கக் கல்வியை முடித்ததோடு மருதன் பெற்றோரோடு தஞ்சையில் தன் தகப்பனாருக்குக் கிடைத்த அஞ்சலகப் பணிக்காக அங்கு சென்று விட்டான். அவ்வப்போது ஓரிரு நாட்கள் இங்கு வந்து போவார்கள். அதுவும் கோவில் திருவிழாவிற்கென்று வந்துவிட்டு உடனே கிளம்பி விடுவார்கள். ஒன்னுமில்ல மருது அதை விடு, அந்த கதையை நான் சொன்னா பெரிய வேதனை… என்றான், நீண்ட பெருமூச்சை விட்டபடி. தூரத்தில் புகையைக் கக்கிக் கொண்டிருந்த அந்த சிறு குடிசையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அப்படி என்ன வேதனை …எங்கிட்ட

சொல்லு….சுப்பு. தோளில் கையை வைத்து உலுப்பினான் மருது.

சிறியூரில் சுப்பரமணியர் பண்ணையார் என்றால் சுற்று வட்டாரத்தில் தெரியாதவர்கள் இருக்க முடியாது. அவரது முதல் சொக்காரன் சுப்புவின் தகப்பன். சாதி, சமயவாதிய குடும்பத்தில் பிறந்தவன். மருது, எனக்கு இந்த சாதி பெருமை பேசினா சுத்தமா பிடிக்காது. யாராச்சும் அவங்கூட சேராத, இவங்கூட பேசாத, அந்த ஊர்பக்கம் போகாத என்று ஏக வசனம் பேசி புத்திபூட்டினா எனக்கு எரிச்சல் தான் வரும். அதுவும் பதினாறு வயசுல நான் மொத மொதல்ல இந்தப் பனங்காட்டுக்குள்ள செவப்பிய பார்த்தப் பிறகு அந்தச் சமத்துவ உணர்வு ரொம்பவுமே எனக்கு அதிகமாயிடுச்சு.

என்னல சுப்பு, என்ன சொல்லுதா..செவப்பியா?

ஆமா, இங்க இதே இடத்தில தெனமும் அவள் அப்பனோடு பதனி இறக்கி காய்க்க வருவா என் செவப்பி…. என்றான் தலையை கவிழ்ந்தபடி. சரிந்து விழுந்து கிடந்த ஒரு பனைமரத்தின் மேல் இருவரும் அமர்ந்தனர். விரைந்தடித்த காற்று அங்கிருந்த பனைகளின் தலையை உருட்டி, உருட்டி விளையாடியபடி… இடமளித்த இடங்களுக்குள்ளெல்லாம் நுழைந்து முட்டி, மோதி ஓஓஓ…ஓ…ஓஓ… என்ற ஒலியெழுப்பிக் கொண்டிருந்தது. சுப்பு மனதிற்குள்ளேயே பழைய நினைவுகளை வார்த்தைகளால் உயிரூட்டி அனலாக்கிக் கொண்டிருந்தான்.

உன் செவப்பியா??

ஆமா. எனக்கு காதல் பிறந்தது அவள் பார்வையால தான்..மருது.

ம்…. சொல்லு… சொல்லு, பெறவு? மருதுவின் கேள்வியில் சற்று ஏளன புன் சிரிப்பு. பெறவென்ன பெறவு, இந்தப் பனங்காடே கதியா அலைஞ்சேன். அவள் எப்போதாவது அதோ அந்த விடிலிக்குள்ள இருந்து வெளிய வந்து எட்டிப் பார்ப்பா. அந்த ஒரு பார்வைக்காகவே நாள் முழுக்கக் காத்துக் கிடப்பேன்.

உங்கிட்ட வந்து என்னைக்காவது பேசியிருக்காளா, நானும் உன்மேல ஆசைபடுதேன்னு அது சொல்லிச்சால…? சொன்னதில்ல…. ஆனா எனக்கு தெரியாதா அவ மனசு என்றவன் அன்றைக்குதான் காதல் வயப்பட்டதைபோல லேசான வெட்கத்தோடு தலையைக் கீழே தொங்க விட்டு காலை ஆட்டிக் கொண்டிருந்தான். இரண்டு கைகளையும் பக்கவாட்டில் ஊன்றியிருந்தான்.

உழுதுபோட்ட ஈர நிலத்தில் நேர்த்தியாய் முளைத்து நிற்கும் பயித்தஞ்செடிகளைப்போல பசுமையாய் வைத்திருந்தான் அந்தக் காதலை அவனுக்குள்ளேயே.

பெறவு என்னாச்சுன்னு சொல்லேன்… சற்று வெறுப்போடு கோபத்தில் கேட்டான். காதலையே தொடாதவனுக்கு காதலின் மென்மை எங்கே புரியும்.! வேறென்ன… இப்படியே இரண்டு வருசம் போச்சு. ஒருநாள் சாயங்காலம் மங்கி இருட்டாச்சு…

காலையிலிருந்து அவளை வெளியே பார்க்கவே முடியல. என்னால அவளை பார்க்காம வீட்டுக்கு வெறுமையா திரும்பி போவ முடியல… அதனால அவள் விட்டிக்கே போய் பார்க்கப் போயிட்டேன்.

அய்யோப்பா…வேற யாரும் உன்னை பாக்கலையா..?

ம்…கிட்ட போய்…செவப்பின்னு கூப்பிட்டேன். வெளியே பதட்டமா வந்தா… முகம் முழுசும் வீங்கியிருந்துச்சு. ஒரு கண் வீக்கத்தால மூடியிருந்துச்சு. என்னாச்சி செவப்பி….தேனீச்சி கடிச்சிரிச்சான்னு கேட்டேன்.

இல்ல… இல்ல…. நீங்க போயிருங்க… எங்க அப்புச்சி வந்திரும் என்று வாயை பொத்திக்கிட்டு அங்குமிங்கும் பயத்தில பார்த்தா.

சொல்லு…. முகமெல்லாம் வீங்கிருக்கு… என்னாச்சி செவப்பி.

நேத்து சாயங்காலம் வீட்டுக்குள்ளயிருந்து கூரையிடுக்கு வழியா, நீங்க நின்னுட்டிருந்த இடத்த பாத்தேன்… என் அப்புச்சி என் முடிய பிடிச்சு இழுத்து, அடி அடின்னு அடிச்சுட்டு… முகத்தைமூடி தேம்பித் தேம்பி அழுதாள். வெடுக்குன்னு, என் பெறத்தயிருந்து… அய்யா…. ன்னு, சத்தம் கேட்டு திரும்பினேன். அவள் தகப்பன் கைக்கூப்பி குலுங்கி குலுங்கி அழுதுகிட்டே நின்றிருந்தார். சடாருன்னு என் காலில் விழுந்துட்டார். நான் நடுங்கி போனேன். என் பொண்டாட்டி செத்த பெறவு, என் மகளுக்காவதான் இந்த பேய்காட்டுக்குள்ள விடிலி போட்டு உயிரோடு இருக்கேன். இவள என்னை போல அன்றாடகாய்ச்சி ஒருத்தன் கையில ஒப்படைச்சிட்டு உசிர விட்டிறனுமுன்னு அந்த சொடலைய தெனமும் வேண்டிட்டு இருக்கேன்ங்க ஐயா. உங்க குடும்பத்துக்கு இந்த வெவகாரம் தெரிஞ்சா என் கண் முன்னாலேயே எம்புள்ளைய கொன்னுருவாங்கையா.

உங்களுக்கு தெரியாதது ஒன்னுமில்ல. போயிருங்கையா.. போயிருங்க…. என்று குப்புற விழுந்து கதறிக் கதறி அழுதார். எந்திரிக்க மாட்டேன்னு படுத்தே கிடந்தார். நான்

செவப்பியை திரும்பி பார்த்தேன். அவள் ஏங்கி, ஏங்கி அழுது கொண்டு அவள் ஐயனையே பார்த்தபடி நின்றிருந்தாள்.

என்னால் தாங்கவே முடியல.

செவப்பி, இப்பவே எங்கூட வா. நான் உன்னை எந்த நிலமையிலயும் கைவிட மாட்டேன். வா.. எங்கையாவது போயிரலாமுன்னு அவள் கையை பிடிச்சேன்.

அவள் அழுகையை நிறுத்திட்டு என் கண்ணையே பார்த்தா. அந்த ஒருசில வினாடி பார்வையில் என்மீது அவா வச்சிருந்தர மொத்த ஆசையும் காதலையும் என் உயிரு அளந்துருச்சி.

அந்த நேரமா பார்த்து, அவள் தகப்பன் எந்திரிச்சு அவளை அந்த விடிலிக்குள் தள்ளி, தடித்த அந்த மட்டைக்கதவை ஓங்கி அடைத்து சாத்தினார். அய்யா போயிருங்க… என்று கும்பிட்டார். நான் விடிலிக்குள் நின்று என்னையே பார்த்த செவப்பியை ஒரு நிமிடம் பார்த்துவிட்டு ஒரு முடிவோடு திரும்பினேன்.

நான் நடக்க, நடக்க விடிலிக்குள் அவுங்க ரெண்டு பேரின் அழுகையும், செவப்பியின் அழாதப்புச்சி நான் இனி அவியள பாக்க மாட்டேன். நீ சொல்லுதபடி நடப்பேன்னு சொல்லும் சத்தமும் எனக்குள்ள விசமாய் இறங்கி கொண்டிருந்தது. அடுத்த நாள் காலங்காத்தால, சேவல் கூவுமுன்னே எந்திருச்சி இங்க வந்துட்டேன். அவளை எப்படியாவது கூட்டிட்டு போயிடனுமுன்னு. ஆனா…ஆனா….வார்த்தை வராமல் விழிநிறைந்த கண்ணீரை மறைக்க முடியாமல் அங்குமிங்கும் முகத்தைத் திருப்பிப் பார்த்தான் சுப்பு.

லேசான வாடைக் காற்று வீசிக் கொண்டிருந்த போதும் அவன் முகத்தில் வேர்வை ஊசிமுனை நீர்த்துளிகளாய் துளிர்த்திருந்தது.

வேற என்னாச்சு.சுப்பு..!?

நான் தொலைவில் வரும்போதே ஏதோ எரிஞ்ச வாடையடிக்க…. கிட்ட வந்தேன். அவள் விடிலி முழுசா எரிஞ்சி சாம்பலா கிடந்துச்சு.

அய்யோ….செவப்பி?

ரெண்டுபேரையும் காணல. விடிலி மட்டும் எறிஞ்சி சாம்பலா கிடந்துச்சி. சுற்று வட்டாரம் முழுசும் ஒரு இடம் விடாம தேடினேன். எங்கேயும் இல்ல… தொண்டையை துக்கம் கவ்விப் பிடிக்க…. அவனது முதுகும் தோளும் குலுங்கியது.

சுப்பு…. அழாத….ஏல….என்றான் மருதன்.

ஆனா…. ஆனா…. ஒன்னுமட்டும் கொஞ்சம்… ஆறுதலா இருந்துச்சி. அவளை எந்த கிணத்திலேயோ கொளத்திலேயோ பெணமா பார்க்கல…. என்றவன் சத்தத்தை அடக்கமுடியாமல் ஏங்கி ஏங்கி அழுதான். அவன் சத்தம் எதையெதையோ எண்ணி எண்ணி ஓங்கியது… அணைத்துக் கொண்டான் மருது. அருகில் தெரிந்த மேற்குத் தொடர்ச்சி மலை இடுக்குகளுக்குள் வேக வேகமாக இறங்கி மறைந்து கொண்டிருந்தது அந்தி சூரியன். சரி இருட்டுது பாரு… வா… போவலாம். எழும்பு சுப்பு… கீழே குதித்து சுப்புவின் கையைப் பற்றி இழுத்தான்.

கொஞ்ச நேரம் இருந்துட்டு போவோம்… என்றவன் தன் இடதுபக்கம் கழுத்தை சரித்து முன் தோள்பட்டையை சற்று மேலே தூக்கி ஈரத்தை துடைத்துக் கொண்டான்.

இங்க பாரு சுப்பு, நாங்க இங்க வரும் முன்னமே உங்கப்பா உன்னைப்பற்றி ஒரு கடிதம் போட்டிருந்தார். இந்த விசயத்தை சொல்லியும் சொல்லாமலும் எழுதியிருந்தார். நீ கல்யாணம் பண்ணாம இருப்பதால உனக்கு பெறவு பிறந்த பெரியவரு மகன்களுக்கும் நல்ல காரியங்கள் நடக்காம கிடப்பதா தெரிவிச்சிருந்தார். ஆனா… உன் காதல் விவகாரம் இந்த அளவு ஆழமா இருக்குமின்னு நான் நெனைக்கல. சரி, அத விடு சுப்பு. அவள் எங்காவது குடியும் குடித்தனமுமா வாழ்ந்திட்டு தான் இருப்பா. அவுங்க ரெண்டுபேரும் இங்கிருந்திருந்தா அவள் தகப்பனாரு சொன்ன மாதிரி தான நடந்திருக்கும்…அதெல்லாம் உனக்கு தெரியாதால.

ஆசைப்படலாம் அதுக்குன்னு ஆபத்து தெரியாமயா போய் விழுவாங்களா இப்படி? சரி, நடந்தாச்சி, முடிஞ்சாச்சி, இனி எல்லாத்தையும் மறந்துட்டு வாழ்க்கைய பார்ப்போம் வா… என்றான்.

இல்ல….என்னால என் செவப்பிய தவிர வேற யாரையும் பொண்டாட்டியா ஏத்துக்க முடியாது. எந்த பாவமும் அறியாத என் செவப்பிய, எங்க ஐயன் ஏதோ செஞ்சிருப்பாரோன்னு தோணுது…. மருது. குழந்தையை போல தலையை மேலே தூக்கி வானத்தைப் பார்த்தபடி வாய்விட்டு அழுதான்… அவனது ஏங்கலையும் கதறுதலையும் எதுவும் செய்ய முடியாமல் தடுமாறினான், மருது.

சுப்பு….சுப்பு…இங்கபாரு…

அழாத. நான் சொன்னா கேளு சுப்பு.

அவன் பத்து ஆண்டுகளாக அடக்கி வைத்திருந்த அத்தனை வலிகளையும் ஒட்டு மொத்தமாக கொட்டி , புலம்பி கதற… அதிர்ந்து போனான் மருது.

சுப்பு….உன் செவப்பிக்கு ஒன்னும் ஆகல…. சொன்னா கேளு… அவள் உயிரோடதான் இருக்கா…. இங்கபாரு…. என்று அவன் முகத்தை ஏந்தினான்.

லேசான அதிர்ச்சியில் அதிர்ந்தவன் என்ன.. சொன்னா மருது…. என்று அவன் முகத்தையே உற்றுப்பார்த்தான்…

ஆமா… உங்கப்பா கடிதத்தில் எழுதியிருந்தார்… ஆனா உங்கிட்ட சொல்ல கூடாதுன்னு சத்தியம் பண்ணி எழுதியிருந்தார்…

உங்கிட்ட பேசி உன் மனசை மாற்ற தான் இந்தமுறை நாங்க இங்க வந்தோம். ஆனா உன் வேதனைக்கு முன்னால என்னால எதையும் மறைக்க முடியல… சுப்பு.. என்றவன் கண்கலங்கினான்.

சுப்பு எதையும் செவிமடுக்காமல் பனையிலிருந்து குதித்து இறங்கி... மருது... செவப்பி இருக்காளா.... எங்க.... எப்படி..... சொல்லு.... சொல்லு..... அவன் இரு கன்னங்களிலும் தன் நடுங்கிய விரல்களால் தட்டி, தட்டி... நாக்கு தடுமாற கேட்டான். வாய் குளறியபடி... திரும்ப திரும்ப அதேயே கூறினான்.

சொல்லு... சொல்லு... சொல்லு..... மருது.

மருது, அவன் முகத்தைப் பார்த்துவிட்டு, கண்ணீர் வடிய கைகளை மார்பருகே கட்டிக் கொண்டு திரும்பி நின்றான். சுப்பு அவனை சுற்றி வந்து அவன் கால்களைப் பிடித்தபடி முழங்காலில் நின்று, சொல்லு மருது... அவள் எங்கிருக்கிறா..... தலையை அவன் முட்டுகளில் இடித்தபடியே கத்தினான்.

குனிந்து அவனை தூக்கி, அழாதல.... இங்க தான் இருக்கா.... சுப்பு. நீ இப்படி அழுவதை நிறுத்து. என்னால உன்ன இப்படி பாக்கவே முடியல.... வேகமாய் எழுந்து சுற்றி சுற்றிப்பார்த்தான்... பயித்தியம்போல் திரும்பவும் கைக்கூப்பி கெஞ்சினான்... எங்க மருது.... சொல்லு... கூப்பிய அவன் கையை பற்றிப் பிடித்து, மருது.... நம்ம ஊர்கிட்ட இருக்க இந்த டோனாவூருல... வெள்ளைக்காரம்மாகிட்ட தான் உன் செவப்பி வாழ்ந்திட்டு இருக்காளாம். அவள் தகப்பன் அவளை அந்தம்மா பொருப்பில ஒப்படச்சிட்டு அவரோட பூர்வீக ஊருக்கே போய்ட்டாராம். மருது...... மருது... என்று மீண்டும் கும்பிட்டவன்... கும்பிட்ட கையை விலக்காமல் அங்கிருந்து பார்க்க தெரிந்த டோனாவூர் தேவாலயத்தைப் பார்த்து கூப்பிய கைகளை தலைக்குமேலே தூக்கி பிறகு நெஞ்சிற்கு கொண்டுவந்து குனிந்து வணங்கினான்.

வா... இப்பவே போய் அவளை பார்ப்போம்... சொன்னவன் பதிலுக்கு காத்திராமல் வேகமாய் நடந்தான்.... சுப்பு... நில்லு. இந்த ராத்திரி வேண்டாம். கொஞ்சம் பொரு.... நீ அங்க போனா உடனே உன்னை உள்ள விட மாட்டாவ. நிலமை இன்னும் மோசமாகும். அவளை வேற எங்கையாவது அனுப்பி வைச்சிறலாம். பொறுமையா இரு.... யோசிச்சு செய்வோம். எத்தனை காலம் காத்திருந்த நீ, நெனைச்சு பாரு சுப்பு.

ஆமா, மருது... அவள் உயிரோடு இருந்தாலே போதும்... நான் அந்த சந்தோசத்திலேயே வாழ்ந்திருவேன்.... என்றவன் முகத்தை துடைத்துக் கொண்டான். வேட்டியை சரி செய்தபடி... ஒரு குழந்தையாய் ஏறிட்டுப் மருதுவைப் பார்த்தான். சுப்பு... நீங்க தஞ்சைக்கே வந்துருதீங்களா... அங்க எந்த பிரச்சனைக்கும் வழியிராது என்றான் மென்மையாக, சுப்புவின் கலங்கிய கண்களை உற்றுப் பார்த்தபடி.

மருது உச்சரித்த அந்த நீங்க என்ற பன்மைக்குள் செவப்பியும் இருந்து சிரிப்பதை பார்த்தபடி, மகிழ்ச்சிக்குள் அடைக்கலமானான்... அந்தச் சுப்பு!

**தொடரும் மகிழ்ச்சி.**

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்









### சின்னத்தின் விளக்கம்:

சிலுவை தூயதென்பதற்கு இரு கருப்புக் கோடுகளுக்கு நடுவில் வெண்சிலுவை சிறப்பாகும். இருகருங்கோடுகள் மரச்சிலுவையாகும். சிலுவையினைக் கட்டிப் பிடித்து அணைத்திருப்பது மீன். மீனின் கிரேக்கச் சொல் IXDUS. கலிலேயர்க்கு மிகவும் விருப்பம் (தொழிலும், உணவும்). ஆதிகிறிஸ்தவர்கள் அரசுக்கும், யூதர்க்கும் பயந்து, தங்களை கிறிஸ்தவர்களென கூற அஞ்சி, இரகசிய விசுவாசிகளாய் வாழ்ந்த போது, தங்கள் வீடுகளில் சிலுவை குறியிட பயந்து, மீன்குறியை கதவிலிட்டு (பிற கிறிஸ்தவர்களுக்கு விளங்குமாறு) வாழ்ந்தனர்.

இதன் கிரேக்க எழுத்துகளை, தங்களுக்குள் கீழ்கண்டவாறு விளங்கி மகிழ்ந்தனர்.

(I) என்பதற்கு " இயேசு" , (X) என்பதற்கு " கிறிஸ்து" (D) " தியாஸ்" (கடவுள்) என்றும், (U) " உயாஸ்" (குமாரன்) என்றும், (S) என்பது 'சோக்கா' (இரட்சக்கிறது) எனும் கிரேக்க பதங்களை இஃதுஸ் (IXDUS) என்று வழக்கிலிருந்த மீன் படத்தை, கதவில் காட்டி, பயந்து வாழ்ந்தனர். இது கிரேக்க அரசுக்கும், யூத சபை தலைவர்களுக்கும் மறைவானதே!







### சங்கரன்கோவில்
# திருச்சபையின் வரலாறு

**ஜா.ஜான் ஞானராஜ்**

தென்காசி மாவட்டத்தின் வட பகுதியில் வருவாய் கோட்டத்தின் தலைமை இடமாக, தாலுகா தலைமையிடமாக சங்கரன்கோவில் அமைந்துள்ளது. திருநெல்வேலியில் இருந்து ராஜபாளையம் செல்லும் நெடுஞ்சாலையில் சுமார் 54 கிலோ மீட்டர் தொலைவில் சங்கரன்கோவில் உள்ளது. சங்கரன்கோவில் நெடுங்காலமாக சங்கரநயினார் கோவில் என்று அழைக்கப்பட்டு வந்தது. தற்போது நான்கு மாவட்டங்களாக பிரிந்து நிற்கும் பழங்கால ஒருங்கிணைந்த திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலி மற்றும் ஸ்ரீவில்லிபுத்தூர் நகரங்களுக்கு அடுத்த பெரிய ஊராக சங்கரன்கோவில் திகழ்ந்து வந்தது.

இவ்வூர் இந்துக்களின் புராணங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டது. வைதீகப் பட்டணமாகிய இவ்வூரில் அதிகமான இந்து கோவில்கள் உள்ளன. சங்கரநயினார் - கோமதி அம்பாள் திருக்கோயில் இந்த ஊரில் உள்ள உலகப் பிரசித்தி பெற்ற கோயில் ஆகும். இங்கு நடைபெறும் ஆடித்தபசு திருவிழா பழங்கால ஒருங்கிணைந்த திருநெல்வேலி மாவட்டத்தில் மாவட்டமெங்கும் அரசு விடுமுறை விடும் அளவிற்கு முக்கியமானதோர் பெருந்திருவிழாவாகும்.

சங்கரன்கோவில் பிரியாணி உலகப் புகழ் பெற்றது. நெசவுத் தொழிலிலும் இவ்வூர் பெயர் பெற்று சிறப்புடன் விளங்குகிறது. இஸ்லாமியர்களும் கணிசமாக இவ்வூரில் வாழ்கின்றனர். சங்கரன்கோவில் நகரின் மையப்பகுதியில் இஸ்லாமியர்களின் பெரிய பள்ளிவாசல் உள்ளது. அனைத்து தமிழ் சமூகங்களும் சங்கரன்கோவிலில் ஒற்றுமையோடு கலந்து வாழ்கின்றனர்.

### நற்செய்திப் பணியின் தொடக்கம்

ரேனியஸ் ஐயரவர்களின் ஊழிய காலத்தில் வாகைக்குளத்தை தலைமை இடமாகக் கொண்ட வடநெல்லைப்

பணித்தள எல்லைக்குள் சங்கரன்கோவில் இருந்தது. வடநெல்லை மிஷனரிகள் நற்செய்தி அறிவிப்பு பணியைச் சிறப்பாகச் செய்து வந்தார்கள்.

## சங்கரன்கோவிலில் ரேனியஸ் ஐயரவர்களின் நற்செய்திப் பணி

நெல்லை அப்போஸ்தலர் ரேனியஸ் ஐயரவர்கள் தாம் சங்கர நயனார் கோவிலில் 1837 ஆகஸ்ட் மாதம் ஆடி தபசு விழா நடைபெற்று வந்த 9 முதல் 15 வரை ஒரு வார காலம் தங்கியிருந்து இரவும் பகலும் நற்செய்தி அறிவித்து வந்த காரியங்களை லண்டன் தாய் கமிட்டி சி. எம். எஸ் மிஷனுக்கு அனுப்பிய ரிப்போர்ட்டில் பதிவு செய்துள்ளார்கள். சங்கரன்கோவில் மட்டுமல்லாமல் சுற்று கிராமங்களிலும் அதே வேளையில் நற்செய்திப் பணி ரேனியஸ் ஐயர் அவர்களால் அறிவிக்கப்பட்டதின் பயனாக சங்கரன்கோவிலுக்கு அருகில் உள்ள கிராமங்களான சுப்புலாபுரம் மற்றும் மேல ஆலங்குளம் ஆகிய கிராமங்களில் திருச்சபைகள் உருவானது. ஆனால் அந்த காலகட்டத்தில் சங்கரநயினார் கோவில் என்ற சங்கரன்கோவில் திருச்சபை உருவாகவில்லை.

## சங்கரன்கோவில் வட்டாரத்தில் பிளிமத் பிரதரன் சபை (Plymouth Bretheran Mission) ஊழியங்கள்

ரேனியஸ் ஐயரவர்களுக்கு பின்னரும் சி.எம்.எஸ். மிஷனரிகளின் நற்செய்தி பணி சங்கரன்கோவில் வட்டாரத்தில் சிறப்பாக நடைபெற்று வந்தது. வடநெல்லை வட்டார சி.எம்.எஸ் மிஷனரிமார்கள் சங்கரன்கோவில் மற்றும் சுற்று கிராமங்களில் நற்செய்தி பணியை தொடர்ந்து சிறப்பாக செய்து வந்தார்கள். இதே காலகட்டத்தில் பிளிமத் பிரதரன் சபை மிஷன் ஊழியங்கள் சங்கரன்கோவில் மற்றும் சுற்றுவட்டாரங்களில் சிறப்பாக நடைபெற்று வந்தது. பிளிமத் பிரதரன் சபை (Plymouth Bretheran Mission) ஊழியங்கள் திருமறை வெளிப்பாடு மற்றும் கிறிஸ்துவின் இரண்டாம் வருகை ஆகிய சித்தாந்தங்களை மையமாகக் கொண்டு 1831 இல் இங்கிலாந்தில் நிறுவப்பட்டது. பிளிமத் பிரதரன் சபை அந்தோனி நோரிஸ் குரோவ்ஸ் என்பவரால் 1833 இல் இந்தியாவில் பீகார், ஆந்திரா, தமிழ்நாடு ஆகியவற்றில் நிறுவப்பட்டது. மிஷனரி அந்தோனி நோரிஸ் குரோவ்ஸ் அவர்களைப் பின்பற்றிய ஜான் அருளப்பன் அவர்களால் திருநெல்வேலி மாவட்டத்தில் ஏராளமான பிரதரன் மிஷன் சபைகள் நிறுவப்பட்டன.

சங்கரன்கோவில் வட்டாரத்தில் சங்கரன்கோவிலுக்கு வடபகுதியில் இருந்த கிராமங்களான குவளைக் கன்னி, கோமதிமுத்துபுரம் என்ற புறக்கடையான்பட்டி சங்கரன்கோவிலுக்கு வடமேற்கு பகுதியில் அமைந்திருந்த அருளாச்சி மற்றும் திருமலாபுரம் ஆகிய கிராமங்களில் இந்த சபையின் சார்பில் பெரிய சபைகள் நிறுவப்பட்டது. இவற்றில் கோமதிமுத்துபுரம் என்ற புறக்கடையான்பட்டி திருச்சபை சி எம் எஸ் மிஷனோடு கூட இணைந்தது. பிற சபைகள் தனித்தே செயல்பட்டு வந்தன. ஜான் அருளப்பனுக்குப் பின்னர் தமிழ் டேவிட் மற்றும் ஹேண்ட்லி போர்டு ஆகியோர் 1890 க்கு முன்னரே சபைகளை நிறுவியிருந்தனர்.

## சார்ஜெண்ட் கால திருச்சபை

அக்காலத்து ஒன்றுபட்ட திருநெல்வேலி மாவட்டம் மற்றும் திருமண்டல திருச்சபைகளில் CMS மிஷன் திருச்சபைகள் தலைமை மிஷனரியின் காலத்தை அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தப்படுகின்றன

1. ரேனியஸ் கால திருச்சபைகள் - 1820 - 1838,
2. பெற்றிட் கால திருச்சபைகள் - 1835 - 1847,
3. சார்ஜெண்ட் கால திருச்சபைகள் - 1847 - 1889,
4. உவாக்கர் கால திருச்சபைகள் - 1889 -1897,
5. கார் மிஷனரி கால திருச்சபைகள் 1897 - 1915

மேற்கண்ட ஐவரும் C.M.S தலைமை கண்காணிப்பு மிஷனரிகளாக சிறப்பாக பணி செய்து ஏராளமான புதிய திருச்சபைகளை உருவாக்கியவர்கள். மேற்கண்ட ஐவரில் ரேனியஸ், சார்ஜெண்ட் மற்றும் கார் மிஷனரி காலத்தில் அதிக அளவில் சபைகள் உருவாகி இருக்கிறது. சங்கரன்கோவில் திருச்சபையின் முதல் காரைக் கட்டிட தேவாலயம் கட்டப்பட்ட ஆண்டு 1897 என்பதை அறிந்து அதை உற்று நோக்கி பார்க்கையில் அதிலிருந்து சுமார் 20 ஆண்டுகளுக்கு முன்பாகவே இங்கு சபை உருவாகி இருக்கிறது என்பதை அறிய முடிகிறது. ஆதலால் இது சார்ஜெண்ட் கால திருச்சபை என்பதை அறிந்து கொள்ளலாம். சங்கரன்கோவில் திருச்சபையானது ரேனியஸ் ஐயரவர்கள் காலத்தில் சபை உருவாவதற்கான தொடக்க பணிகள் நடைபெற்று சார்ஜெண்ட் காலத்தில் திருச்சபை உருவாகி உள்ளது. கார் மிஷனரி காலத்தில் தேவாலயம் கட்டப்பட்டு சங்கரன்கோவில் சபை வளர்ச்சி அடைந்துள்ளது.

## சங்கரன்கோவில் வட்டாரத்தில் CEZM செனனா மிஷன் ஊழியங்கள்

CEZM - Church of Church of England Zenana Missionary Society எனும் ஆங்கிலிக்கன் திருச்சபையின் பெண்கள் அமைப்பு 1880 இல் இங்கிலாந்தில் நிறுவப்பட்டது. இந்த அமைப்பின் மிஷனரிகள் உடனடியாக இந்தியாவில் குறிப்பாக அக்காலத்து ஒருங்கிணைந்த திருநெல்வேலி மாவட்டத்தை உள்ளடக்கியதாக இருந்த திருநெல்வேலி CMS மிஷனுக்குப் பணிசெய்ய வந்தனர். நற்செய்தி பெருமளவில் பரவாத மற்றும் வீட்டை விட்டு பெண்கள்

வெளியே வராத பகுதிகளுக்கு முக்கியத்துவம் தந்து பணி செய்யச் சென்று அவர்களது முக்கியப் பணித்தளமாக சங்கரன்கோவில் வட்டாரத்தை தெரிந்தெடுத்து சங்கரன்கோவிலை தலைமையிடமாகக் கொண்டு பணி செய்தார்கள்.

CEZM - Church of England Zenana Mission எனும் மிஷன் சங்க மிஷனரிகளால் அரசினர் மருத்துவமனைக்கும் தற்போதைய தேவாலயத்திற்கும் இடைப்பட்ட பகுதியில் 1897 இல் கட்டப்பட்டிருந்த தேவாலயம் அமைந்திருந்த பகுதி தற்போதைய தேவாலயம் அமைந்துள்ள பகுதி ஆகிய அனைத்தையும் உள்ளடக்கிய இடங்கள் வாங்கப்பட்டு அந்த இடத்தில் அவர்கள் தங்கி பணி செய்து வந்தார்கள். மேற்கண்ட செய்தியை 1995 இல் சங்கரன்கோவில் திருச்சபை வரலாறு எழுதுவதற்காக நான் சங்கரன்கோவிலில் நேரடி கள ஆய்வு செய்தபோது சங்கரன்கோவில் சேகர எழுத்தர் திரு.டேனியல், சங்கரன்கோவில் திருச்சபையின் கோயில் குட்டியார் திரு. ஜான், சங்கரன்கோவில் TDTA CEZM தொடக்கப்பள்ளியின் தலைமை ஆசிரியர் திரு. சோமசுந்தரராஜ் ஆகியோர் அவர்களின் முன்னோர்களிடம் செவிவழியாக கேட்ட செய்தியாக என்னிடம் தெரிவித்தார்கள். மேலும் அவர்கள் தெரிவித்த மற்றொரு வரலாற்று பாரம்பரிய செய்தி என்னவென்றால் சங்கரன்கோவில் நகரத்தின் மத்தியில் காணப்படும் சி.எஸ்.ஐ காம்பவுண்ட் என்று அழைக்கப்படும் தொடக்கப்பள்ளி மைதானத்தில் கூறைக் கட்டிடத்தில் 1897 க்கு முன்னர் CMS தேவாலயம் செயல்பட்டு வந்தது என்றும் அதன் அஸ்திபார கற்கள் இன்றளவும் சி எஸ் ஐ காம்பவுண்டில் உள்ள தொடக்கப்பள்ளி மைதானத்தில் காணப்படுவதையும் நேரில் காண்பித்தார்கள். ஆதலால் இந்த திருச்சபை கட்டாயம் சார்ஜென்ட் தலைமை கண்காணிப்பு மிஷனரி ஆக செயல்பட்டு வந்த காலகட்டத்தில் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

## 1897 இல் கட்டப்பட்டிருந்த தேவாலயம்

1897 இல் கட்டப்பட்டிருந்த தேவாலயம் தற்போதைய தேவாலயத்திற்கும் அரசினர் மருத்துவமனைக்கும் இடைப்பட்ட பகுதியில் அமைந்திருந்தது. நாழி ஓடுகளை மேற்கூறையாகக் கொண்டதாக அது கட்டப்பட்டிருந்தது. பல ஆண்டுகள் கழித்து ஆலய ஆல்டர் கட்டப்பட்டு அந்த தேவாலயம் விரிவாக்கம் செய்யப்பட்டிருந்தது. தேவாலயத்தின் மேற்கூறையாக இருந்த நாழிஓடுகள் புயல் மழையால் சேதம் அடைந்து இடிந்து விழுந்த போது புதிய தேவாலயம் கட்டப்பட வேண்டிய அவசிய சூழ்நிலை ஏற்பட்டது.

## 1980–1981 இல் கட்டப்பட்ட புதிய தேவாலயம்

புயல் மழையால் சேதம் அடைந்து நாழி ஓடுகளை மேற்கூறையாகக் கொண்ட தேவாலய மேற்கூறை இடிந்து விழுந்த போது சபை மக்கள் அதிர்ச்சி அடைந்தனர். அந்த சூழ்நிலையில் சமய சகாயராக இரு சகோதரர்கள் புதிய தேவாலயம் கட்டிக்கொடுக்க முன்வந்தார்கள். அந்த இரு சகோதரர்களாகிய K.P.S.D. சேதுராஜ் அவர்கள் மற்றும் Dr. சாமுவேல் MBBS அவர்கள் ஆகியோரின் சொந்த செலவால் சுமார் 2 லட்சத்திற்கும் மேற்பட்ட செலவில் புதிய தேவாலயம் கட்டப்பட்டது. புதிய தேவாலயம் கட்ட நெல்லை பேராயர் மகாகனம்.சா.தானியல் ஆபிரகாம் அவர்களால் 06.02.1980 அன்று அடிக்கல் நாட்டப்பட்டது. ஒன்றே முக்கால் ஆண்டுகளாகச் சிறப்பான முறையில் கட்டப்பட்டு வந்த தேவாலயம் 24.12.1981 அன்று நெல்லை பேராயர் மகாகனம்.சா.தானியல் ஆபிரகாம் அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. 1897 இல் கட்டப்பட்டிருந்த தேவாலயம் அமைந்திருந்த பகுதியில் சபை ஊழியர் வீடு, சேகர அலுவலக அறை மற்றும் Parish Hall ஆகியவை கட்டப்பட்டது.




# பால் ராபர்ட் டெட்மேன்

ஸ்டீபன் ராஜ்குமார் இன்பநாதன்



Rev. Paul Robert Dettman, அக்டோபர் 10, 1922 ஆம் ஆண்டு நியூயார்க் அருகில் உள்ள Oswego என்ற ஊரில் பிறந்தார். அமெரிக்காவில் பிரசித்தி பெற்ற Oberlin கல்லூரியில் பட்டப் படிப்பை முடித்தார். 1945 ஆம் ஆண்டு அவருக்கு திருமணம் நடந்தது. அவரது மனைவியின் பெயர் Jean Louise Emery. 1946 ஆம் ஆண்டு தன்னுடைய கல்லூரி படிப்பை படித்த பின்பு லண்டனில் உள்ள அமெரிக்க தூதரகத்தில் பணி செய்தார். அதன் பின்பு அமெரிக்க விமானப்படையில் பணியை தொடர்ந்தார். 1945 ஆம் ஆண்டு நடந்து முடிந்த இரண்டாம் உலகப்போரில், இவருக்கு மிகவும் நெருக்கமான நண்பர்கள் பலர் மரணம் அடைந்ததை கேள்விப்பட்டு மிக மனம் வருந்தினார். ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவை சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்ட Dettman, கிறிஸ்துவினுடைய நற்செய்தியை மற்ற மக்களுக்கு அறிவிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு, அமெரிக்காவிலிருந்து செயல்பட்டு வந்த UCBWM அருட்பணி இயக்கத்தை அணுகினார். இந்த இயக்கம், ஏற்கனவே மதுரையில் பல மிஷனரி ஸ்தாபனங்களை நிறுவி செயல்பட்டு வந்த காலகட்டம். UCBWM இறைபணியாளர்கள் நிறுவிய மதுரை அமெரிக்கன் கல்லூரியில் பேராசிரியர் பணி ஒன்று காலியாக உள்ளது. அதற்கு செல்ல ஆயத்தமா? என்று கேட்ட பொழுது, அவரும் அவருடைய மனைவியும் இசைந்து, கடல் வழியாக மதுரை வந்து சேர்ந்தனர்.

Rev. Dettman மதுரையில் அருட்பணியாளராக பணிபுரிந்த காலத்தில், அனேக சமூக நலத்திட்டங்களை மேற்கொண்டு மக்களுக்கான வாழ்வாதாரங்களை உருவாக்கினார். குறிப்பாக மதுரையில் உள்ள பசுமலையில் விவசாயம் செய்வதற்காக ஒரு கிணறு வெட்டினார். அந்த கிணறு well என்று அழைக்கப்பட்டது. அமெரிக்கன் கல்லூரியில் ஆங்கில பேராசிரியராக மட்டுமல்லாமல், நிதி காப்பாளராகவும் பணியாற்றினார். இந்தியாவில் பணியாற்றிய வெளிநாட்டு அருட்பணியாளர்களின் குழந்தைகளுக்கு என்று ஆரம்பிக்கப்பட்ட கொடைக்கானல் உள்ள சர்வதேச பள்ளியிலும் (Kodaikanal International School) நிதி காப்பாளராகவும் திறம்பட பணி செய்தார். இறை பணியை தமிழகத்தில் நிறைவேற்றி தன் சொந்த சொந்த நாடான அமெரிக்கா செல்லும் முன் இரண்டு ஆண்டுகள் சென்னை பேராயத்திலும் இறை பணி செய்தார். இறைப்பணியோடு கல்விப் பணி, மற்றும் குடிசைகள், சேரிகளில் வசித்த ஏழை மக்களுக்கான வாழ்வாதாரங்களை உருவாக்குவதில் மிகப்பெரிய பங்கு வகித்தார். திராவிட இயக்க வரலாறு கொள்கைகள் பற்றிய ஆராய்ச்சிகளையும் மேற்கொண்டார். இவர் மிகச்சிறந்த கல்வியாளர்.

அமெரிக்கா சென்ற பின் இந்தியாவின் கலாச்சாரம் அரசியல் இவற்றை பற்றி பல புத்தகங்களை எழுதினார். தன்னுடைய 47வது வயதில் அறிவர் பட்டம் பெற்றார். இந்த தம்பதியருக்கு ஆறு குழந்தைகள். இவர்களில் இருவர் தமிழகத்தில் பிறந்தவர்கள். Rev. Dettmann, நவம்பர் 3, 2001 ஆம் ஆண்டு கர்த்தருக்குள் நித்திரை அடைந்தார்.

இவரது மனைவி மிக சிறந்த ஆசிரியை, ஓவியர் மற்றும் சிறந்த கிறிஸ்தவ பண்புகளை கொண்டவர். இவர் தான் 89 ஆம் வயதில் இறைவனடி சேர்ந்தார்.



டாக்டர் மிஸ்.

# மேரி பாலின் ஜெஃப்ரி

**கடல் கொந்தளிப்பிலிருந்து பயப்படாமல் மீண்டு வந்த மேரி பாலின்**

1890 ஆம் ஆண்டு அமெரிக்கா நாட்டியிலிருந்து ஆச.பிராங்க்லின் எல்ஸ்வொர்த் ஜெப்ரியும் அவருடைய மனைவி திருமதி. காபிடோலா மாட் (Capitola Maud) இருவரும் இந்தியாவிலுள்ள தமிழ்நாட்டிற்கு வந்தார்கள். நற்செய்தி பணி செய்ய தரிசனத்தோடு இன்றைய திண்டுக்கல் மாவட்டம், வத்தலக்குண்டு பகுதிக்கு வந்தார்கள். இவர்கள் இருவரும் படிக்கும்போதே சிறுவயதுமுதல் நண்பர்கள், பின்பு கல்லூரி படிப்பை முடித்து திருமணம் செய்து கொண்டார்கள். இவர்களுக்கு இரண்டாவது பெண் குழந்தை மேரி பாலின் 1893 ஆம் ஆண்டு ஆகஸ்ட் 30ஆம் தேதி பிறந்தார். 1894 ஆம் ஆண்டு கோடை விடுமுறைக்கு அமெரிக்கா சென்றார்கள்.

**கடல் கொந்தளிப்பிலிருந்து மீண்ட பெண்மணி:**

அமெரிக்காவுக்கு நீண்ட விடுமுறைக்கு சென்ற தம்பதிகள், கடல் கப்பல் பயணத்தில் மேல் தட்டில் ஜெப்ரி குடும்பத்தினரும், அவருடைய நண்பர் குடும்பத்தினரும் காற்று வாங்கி கொண்டு இருந்தார்கள். அப்போது திடீர் என்று கடலில் மிகப்பெரிய அலை சீற்றத்துடன் மேல் தட்டை நோக்கி வந்தது. மேரி பாலின் தொட்டிலில் படுத்திருந்தார். அந்த அலை மேரி பாலின் தொட்டியோடு வாரிக்கொண்டு கடலுக்குள் சென்றது. ஜெப்ரியும் அவருடைய மனைவியும் கொஞ்ச நேரம் தம்பித்து போனார்கள். ஆனால், அங்கு மிகப்பெரிய ஆச்சரியம் காத்திருந்தது. தொட்டியோடு கடலுக்குள் போன மேரி பாலின் திரும்பவும் கப்பலின் மேல் தட்டியில் வந்து நின்றது. இதே கப்பலில் மருத்துவம் படிக்க அமெரிக்காவிற்கு பயணம் பண்ணிக்கொண்டியிருந்த ஐடா ஸ்கடர் இருந்தார். மேரி பாலினை தூக்கி கொஞ்சி விளையாடிக்கொண்டியிருந்தார்.

**ஆரம்ப கல்வி:**

அமெரிக்காவிலிருந்து வந்த மேரி பாலின் பெற்றோர். பாலினை மிஷனரிமார்களுடைய பிள்ளைகள் படிக்கும் பள்ளியான ஹைகிளெரில் பாலின் சேர்க்கப்பட்டார். அப்பள்ளியில் நன்றாக படித்தார். ஒவ்வொரு வகுப்பாக படிப்படியாக படித்தார். நல்ல மதிப்பெண் வாங்கினார். ஜெப்ரியின் அடுத்த விடுமுறையில் அமெரிக்கா சென்றார்கள். போகும்போது தன்னுடைய மகள் மேரி பாலினையும் அழைத்துச்சென்றார்கள்.

**மேல் படிப்பு:**

ஜெப்ரி அமெரிக்காவுக்கு போய் விடுமுறை முடிந்ததும்,

மீண்டும் இந்தியா புறப்பட்டார். இந்த முறை தன்னுடைய மகள் மேரி பாலினை அமெரிக்காவில் விட்டுச்சென்றார். ஏனென்றால், மேல் படிப்பை தொடர வேண்டும் என்பதால். மேரி பாலின் M.A முடித்தார். இந்தியாவிற்கு வருவதற்கு மூன்று மாதம் மிஷனெரிப் பயிற்சி பெற்றார்.

**தமிழ் மொழியை கற்றுக்கொள்ளுதல்:**

மேரி பாலின் அவர்களுடைய பெற்றோர் அருப்புக்கோட்டையில் மிஷன் பணியை செய்து வந்தார்கள். இந்த நேரத்தில்தான் 1916 ஆம் ஆண்டு மதுரை-அமெரிக்கன் மிஷனில் பணி செய்ய ஆர்வம் காட்டினார். இதனால் கொடைக்கானலில் தமிழ் மொழியை சில மாதங்கள் பேசவும், எழுதவும் கற்று தேர்ச்சியடைந்தார்.

**முதல் பணி:**

மேரி பாலின் M.D அவர்கள் தன்னுடைய 24வது வயதில் 1917ஆம் ஆண்டு செப்டம்பர் 24ஆம் தேதி முதல் பணியாக மங்களபுரம்) கேப்ரன் ஹால் பெண் பாடசலையில் பணியை தொடங்கினார். இவ்விடத்தில் 3 ஆண்டுகள் தங்கி சிறப்பான பணியை செய்தார். மூன்று ஆண்டுகள் பணி செய்தாலும் தியாக வாழ்க்கை சுவை மிக்கது, முன் மாதிரியான வாழ்வை வாழ்ந்தார் என்று சொன்னால் மிகையாகாது.

1. ஆங்கிலமும், மனையியலும் கற்றுக்கொடுத்தார்.
2. எங்கெங்கே தேவை இருந்ததோ அங்கேயெல்லாம் வேலை செய்தார்.
3. மாணவர்களுடைய கேள்வி கேட்கவும், தாராளமாக கேட்கும் சந்தேகங்களை நீக்க வாய்ப்பு கொடுத்தார்.
4. மாணவர்களை பாடம் எடுக்க பயிற்சி கொடுத்து உற்சாகப்படுத்தினார். ஆங்கிலம் சரியான உச்சரிப்புடன் கற்றுக்கொடுத்தார்.
5. அநேக புத்தகங்களை வாசிக்கவும், வீணான நேரத்தை சரியாக பயன்படுத்தவும் உற்சாகப்படுத்தினார்.
6. வகுப்பு அறையில் இருக்கும் குறைவான எண்ணிக்கையுள்ள பிள்ளைகளை தன் குடும்பமாக பாவித்தார்.
7. வழி காட்டிகள் சங்கம் (Path-finders) ஏற்படுத்தினார். இதன் மூலம் பெண்களின் வாழ்க்கை பல முன்னேற்றம் கண்டது. இச்சங்கம் ஒவ்வொரு வியாழக்கிழமை பலகாரம் செய்து, அதை விற்று பணமாக்கி போஸ்ட் ஆபிஸில் சேர்த்து வைத்தார்கள். இதன் மையமாகக்கொண்டுதான் அரசாங்கம் சிறு சேமிப்பு திட்டம் தொடங்கியது.

**மருத்துவம் படிக்க உந்தப்பட்ட சம்பவம்:**

கோடைகாலம் விடுமுறைக்கு கொடைக்கானல் மேரி பாலின் சென்றார். அங்கு தன் மாணவி காய்ச்சலில் மிகவும் கஷ்டப்பட்டதை கண்டு, அவரை பல இடங்களில் சிகிச்சை கொடுத்து பார்த்தார், ஆனால் காய்ச்சல் குறையவேயில்லை. காய்ச்சல் அதிகமானதால் அந்த மாணவியை வேலூர் மருத்துவமனை ஐடா ஸ்கடர் அவர்களிடம் அழைத்துச்சென்று தீவிர சிகிச்சையினாலும், மேரி பாலின் ஜெபத்தினாலும் அவர் உயிர் பெற்றார். நல்ல சுகமும், பூரணமான ஆரோக்கியமும் கிடைத்தது. மங்களாபுரத்தில் அநேகர் மருத்துவம் குறைவினால் அநேகர் மரித்துக்கொண்டு இருந்தார்கள். அவர்களை காப்பாற்ற எவராலும் முடியவில்லை. இந்த சம்பவம் மேரி பாலினை தாக்கியது. உள்ளம் குமுறியது. ஏன் நாம் மருத்துவம் படித்து இந்த மக்களை காப்பாற்ற முடியாது என்று எண்ணி, மருத்துவப்படிப்பை படிக்க விரும்பம் தெரிவித்தார்.

**மருத்துவம் படிக்க அமெரிக்கா செல்லுதல்:**

1919ஆம் ஆண்டு மதுரையிலிருந்து அமெரிக்காவிற்கு மருத்துவப்படிப்பை படிக்க புறப்பட்டுச் சென்றார். அங்கு தூர தரிசனத்தோடு மருத்துவப்படிப்பை முடிக்க கர்த்தர் உதவி செய்தார்.

**பட்டம் பெற்று மருத்துவ பணி:**

மேரி பாலின் அவர்கள் மருத்துவத்துறையில் (M.D) பட்டம் பெறுவதற்காக சென்றார். மீண்டும் 1926 ஆம் ஆண்டு நவம்பர் 18 ம் தேதி இந்தியாவிற்கு வந்தார். மேரி பாலின் இந்த முறை மதுரைக்கு வராமல் வேலூர் CMS மகளிர் மருத்துவமனையில் சேர்ந்து மருத்துவப்பணி ஆற்றினார். மேரி பாலின் படிக்கும்போதே டாக்டர்.ஐடா ஸ்கடர் 'கண்' மற்றும் 'எலும்பு' டாக்டராகவும் வேலூர் மருத்துவமனைக்கு பணியாற்ற அழைத்திருந்தார். படித்து முடித்ததும் வேலூர் மருத்துவமனையில் மருத்துவ பணியை 1931 ஆம் ஆண்டு தொடர்ந்தார்.

**மரணம்:**

1963 ஆம் ஆண்டு மருத்துவப்பணியில் ஓய்வெடுத்தார். 1974 ம் ஆண்டு ஜீன் 8ம் தேதி இரவு 2.20 மணிக்கு கர்த்தருக்குள் நித்திரையடைந்தார். இந்த மரணத்தோடு மற்றொரு துக்க செய்தி 10 நாட்களுக்கு முன்புதான் இவருடைய தம்பி மரித்துவிட்டார். 10 நாட்களுக்குள் இரண்டுபேரும் மரித்த செய்தி துக்கத்தை ஆழ்த்தியது. இவருடைய மரணம் கர்த்தருக்குள் மகிமையில் பிரவேசித்தது.

**சிந்தனைக்கு:**

இன்று இந்தியாவில் மணிப்பூர் மாநிலம் பற்றி எரிகின்றது. கிறிஸ்தவர்கள் துன்புறுத்தப்படுகின்றார்கள். கோலை செய்யப்படுகின்றார்கள். பெண்கள் பாலியல் தொல்லையில் கொலைசெய்யப்படுகின்றார்கள். அது ஒரு பக்கம் இருந்தால் திருச்சபையில் பதவிக்காகவும், பணத்திற்க்காகவும், அதிகாரத்திற்க்காகவும் சிலரின் சுய இலாபத்திற்க்காகவும் சண்டை போட்டுக்கொண்டு திருச்சபையை நாசமாக்கிக்கொண்டு இருக்கின்றார்கள். மேரி பாலின் போல் எல்லாவற்றையும் மக்களுக்காக தியாகம் செய்த கூட்டம் இன்று குறைந்துவிட்டது. ஊழியம் செய்வதுமில்லை, அடுத்தவர்களை ஊழியம் செய்ய விடுவதில்லை சிந்திப்போம். நான் திருச்சபைக்கு இடையூறாகயிருக்கின்றேனா, இல்லையென்றால் ஊழியம் செய்து வளர்ச்சி பாதையில் கொண்டு போயிருக்கின்றேனா என்று ஆராந்து பார்த்து மேரி பாலினைப் போல் கிறிஸ்துவுக்காக ஊழிய பணி செய்வோம்.

**Rev.G.P.இராஜா.**
**CSI. பழனி நகர் ஆயர் வட்டம்.**

MASS CONVERSION

# கும்பல் இயக்கம்

ஜா.ஜான் ஞானராஜ்

தென் தமிழ்நாட்டின் மிஷனெரி ஊழியங்களில் பல கட்டங்களாக உருவான மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் இயக்கம் கும்பல் இயக்கம் (Mass Conversion) ஆகும்.

**திருவிவிலிய காலம்**

அப்போஸ்தலர் தூய. பேதுரு மற்றும் அப்போஸ்தலர் தூய. பவுல் ஆகியோரின் நற்செய்திப் பணியில் ஆயிரக்கணக்கான மக்கள் ஒட்டு மொத்தமாக கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொண்ட சம்பவத்தை திருவிவிலியம் எனும் வேதாமத்தில் நாம் பார்க்கலாம். மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் இயக்கம் எனும் கும்பல் இயக்கம் - Mass Conversion ஒட்டுமொத்தமாக கூட்டம் கூட்டமாக பொதுமக்கள் வேகமாக கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொள்வதை மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் கும்பல் இயக்கமாக Mass Conversion ஆக உலக அளவில் பார்க்கப்படுகிறது.

**இந்தியாவில் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் கும்பல் இயக்கம்**

இந்தியாவுக்கு நற்செய்தி பணியாற்ற வந்த அப்போஸ்தலர் தூய தோமாவின் காலத்தில் தற்போதைய கேரளாவிலும் தமிழ்நாட்டிலும் மக்கள் கூட்டம் கூட்டமாக கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டனர். ஆனாலும் தூய தோமாவின் ரத்த சாட்சி மரணத்திற்கு பின் அந்த மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் நின்று போனது.

தூய சவேரியார் காலத்து மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் - 16 ஆம் நூற்றாண்டு பரதவர், முக்குவர், கரையர் எனும் மீனவ மக்கள் மத்தியில் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் தூய தோமாவுக்குப் பின்னர் சுமார் 1500 ஆண்டுகள் கழித்து தூய சவேரியார் காலத்தில் தென்னிந்தியாவில் கிழக்கு கடற்கரையோரத்திலும் மேற்கு கடற்கரையோரத்திலும் வாழ்ந்த பரதவர், முக்குவர், கரையர் ஆகிய மீனவர் மத்தியில் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் ஏற்பட்டது.

**30,000 மீனவ பரதவர்கள் ஒட்டுமொத்தமாக கிறிஸ்தவத்தில் சேருதல்**

1532 இல் தூத்துக்குடியில் கருப்பட்டி பணியாரம் விற்றுக் கொண்டிருந்த மீனவ பரதவ பெண்ணுக்கும் அதை வாங்க வந்திருந்த மூர் இஸ்லாமிய போர் வீரனுக்கும் இடையே அந்தப் பெண்ணிடம் போர்வீரன் பாலியல் ரீதியாக கேலி செய்த வார்த்தையின் மூலம் ஏற்பட்ட வாக்குவாதமே மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் உருவாக மூல காரணமாக இருந்தது. அதைத் தொடர்ந்து அந்த மீனவப் பெண்ணின் கணவருக்கும் அந்தப் போர் வீரனுக்கும் இடையே ஏற்பட்ட கைகலப்பால் அந்தப் பெண்ணின் கணவரது காதில் இருந்த காதணியாகிய கடுக்கன் அறுபட்டது. அந்த சம்பவத்தால் மீனவ பரதவ சமூகத்திற்கும் மூர் இஸ்லாமிய சமூகத்திற்கும் இடையே ஏற்பட்ட பெரும் கலவரம் மூண்டது. கலவரத்தினால் மீனவ பரதவ சமூகத்தினர் பெரும் பாதிப்புக்குள்ளாயினர். அந்நேரம் கேரளாவைச் சார்ந்த குதிரை வணிகர் இராம நாயர் எனும் ஜான் டி குரூஸ் தலையீட்டின் காரணமாக போர்த்துக்கீசிய படை மீனவ பரதவ சமூகத்திற்கு ஆதரவாக களமிறங்கி மூர் இஸ்லாமிய படையை தோற்கடித்து தூத்துக்குடியில் இருந்து அவர்களை விரட்டியதன் மூலம் தூத்துக்குடி முதல் கன்னியாகுமரி வரையிலான மீனவ பரதவர் ஒட்டுமொத்தமாக சுமார் 30,000 பேர் கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டனர். இந்த மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் இயக்கம் 1532 ல் தொடங்கி 1542-44 வரையிலும் அதன் பின்னர் 1542 இல் கிழக்குக் கடற்கரை பகுதிக்கு நற்செய்தி பணியாற்ற வருகை தந்த தூய சவேரியாரின் காலத்தில் தூத்துக்குடி முதல் ராமேஸ்வரம் வரையிலான மீனவ பரதவ சமூகத்தினர் மத்தியிலும் பரவியது.

**மீனவ கரையர் மத்தியில் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்**

1542-1544 காலகட்டங்களில் இதே கிழக்கு கடற்கரையோர கிராமங்களில் மீன் பிடி தொழிலை செய்து வந்த கரையர் எனும் மீனவ சமூகத்திலும் பரவியது.

**10,000 மீனவ முக்குவர்கள் ஒட்டுமொத்தமாக கிறிஸ்தவத்தில் சேருதல்**

1544 இல் தூய சவேரியாரின் நற்செய்தி பணியால் கன்னியாகுமரி முதல் திருவனந்தபுரம் வரை மேற்கு கடற்கரை கிராமங்களில் பரவி வாழ்ந்த மீனவ முக்குவர் சமூகத்தினர் ஒட்டு மொத்தமாக 10 ஆயிரம் பேர் கிறிஸ்தவத்தை ஏற்றதால் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் கும்பல் இயக்கம் அங்கு தோன்றியது.

**நாடார்கள் மத்தியில் பல கட்டங்களாக ஏற்பட்ட மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்**

தூய.தோமாவின் நற்செய்திப் பணியே நாடார்கள் மத்தியில் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் எனும் கும்பல் இயக்கத்துக்கான தொடக்கம் தென் திருவாங்கூர் சமஸ்தானம் திருவிதாங்கோட்டில் அப்போஸ்தலர் தோமாவின் நற்செய்திப்

பணியால் ஏராளமான நாடார்கள் கிறிஸ்தவத்தை ஏற்றனர். அவர் காலத்தில் அங்கு கட்டப்பட்ட அரைப்பள்ளி எனும் சிற்றாலயத்தில் அவர்கள் வழிபட்டனர். அது இன்றளவும் காணப்படுகிறது. தூய தோமா கால கிறிஸ்தவர்கள் அங்கிருந்து வடதிசை நோக்கி இடப்பெயர்ச்சி செய்து தற்போதைய வடக்கன்குளம் அருகில் உள்ள அணைக்கரை, தோப்புவிளை, சாத்தான்குளத்தையடுத்த தட்டார்மடம் அருகில் உள்ள சொக்கன்குடியிருப்பு, மூலைக்கரைப்பட்டி அருகில் உள்ள சோமநாதபேரி என பல கிராமங்களில் அவர்கள் பரவி வாழ்ந்தார்கள். சொக்கன்குடியிருப்பில் இருந்து தருவைகுளம் மற்றும் வேம்பார் கிராமங்களுக்கும் சோமநாதபேரியில் இருந்து முக்கூடல் அருகில் உள்ள சிங்கம்பாறைக்கும் இடப்பெயர்ச்சி செய்து வாழ்ந்து வருகிற அவர்கள் தங்களை தோமா கால கிறிஸ்தவர்கள் என அடையாளப்படுத்துகின்றனர்.

### 16 ஆம் நூற்றாண்டில் நாடார்களுக்குள் ஏற்பட்ட மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்

நாகம நாயக்கன் தலைமையில் விஜயநகர ஆட்சியாளர்களால் மதுரை கைப்பற்றப் பட்டதைத் தொடர்ந்து மதுரையை ஆட்சி செய்த பாண்டிய ஆட்சியாளர்களின் வழி மரபினர்கள் கயத்தாறு மற்றும் காமநாயக்கன்பட்டி சுற்று கிராமங்களில் குடியேறி இருந்தனர் அவர்களுக்கு தூய. சவேரியார் மூலமாக நற்செய்தி அறிவிக்கப்பட்டது. தத்துவ போதகர் ராபர்ட் டி நொபிலி மூலமாக கத்தோலிக்க கிறிஸ்தவத்திற்குள் அவர்கள் வழிநடத்தப்பட்டனர். இக்காலகட்டத்தில் பாண்டிய வழிமரபினரான ஆயிரக்கணக்கான நாடார்கள் கிறிஸ்தவத்தை ஏற்றனர். இது நாடார்கள் மத்தியில் ஏற்பட்ட முதல் மாபெரும் மக்கள் திரள் இயக்கமாகும். இன்றளவும் அந்தப் பகுதியில் ஒரு கூட்டமாக கிறிஸ்தவர்கள் வசித்து வருகின்றனர்.

### 17 ஆம் நூற்றாண்டில் நாடார்களுக்குள் ஏற்பட்ட மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்

#### திருநெல்வேலி மாவட்டம்

ஜாண் டி பிரிட்டோ எனும் தூய அருளானந்தர் காலத்தில் நாடார்களுக்குள் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல். வடக்கன்குளம் வட்டாரத்தில் ஏற்பட்டது. இதற்கு அடிகோலியவர் அணைக்கரையை அடுத்துள்ள தோப்புவிளை கிராமத்தைச் சார்ந்த சாந்தாயி எனும் பெண்மணி ஆவார். இவர் 1679 ல் கிறிஸ்தவத்தை ஏற்றவராக வடக்கன்குளத்தில் குடியேறிய வேளையில் அந்தப் பகுதியில் நற்செய்தி அறிவிக்கும் படியாக குதிரை மூலம் பயணம் செய்தவராக ஜாண் டி பிரிட்டோ எனும் தூய அருளானந்தர் வருகை தந்தார். அவர் மூலம் அப்போது அறிவிக்கப்பட்ட நற்செய்தி படிப்படியாக வேகமாக வடக்கன்குளம் சுற்றுவட்டாரம் எங்கும் பரவியது சுற்றுவட்டார கிராமங்களில் ஆயிரக்கணக்கானோர் கிறிஸ்தவத்தை ஏற்றனர்.

#### கன்னியாகுமரி மாவட்டம்

இன்றைய கன்னியாகுமரி மாவட்டம் அக்காலத்தில் தென் திருவாங்கூர் சமஸ்தானம் என்று அழைக்கப்பட்டது. அங்குள்ள நாடார்கள் மத்தியில் 18 ஆம் நூற்றாண்டில் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் உருவானது. அதற்கு அடிகோலியவர் பீட்டர் மொறாட்டோ என 1713 இல் தந்தை. பிராண்டோலினி எனும் இத்தாலிய குரு எழுதிய கடிதத்தின் மூலம் அறிந்து கொள்கிறோம். அதேபோன்று இந்த சம்பவத்தை பெரோலி என்ற வரலாற்று ஆசிரியரும் உறுதிப்படுத்துகிறார். மாத்திரவிளை மற்றும் மாடத்தட்டுவிளை கிராமங்களில் இந்த காலகட்டத்தில் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் நாடார்கள் மத்தியில் தொடங்கியது. இதைத் தொடர்ந்து கல்குளம் மற்றும் விளவன்கோடு தாலுகாக்களில் ஆயிரக்கணக்கான நாடார்கள் கத்தோலிக்க கிறிஸ்தவத்தை பெருந்திரளாக ஏற்று வந்தனர்.

கல்குளம் தாலுகாவில் காரங்காடு விளவங்கோடு தாலுகாவில் வேங்கோடு கிராமங்களும் அந்த கிராமங்களைத் தலைமையிடமாக கொண்ட பங்குகளின் கீழ் இருந்த கிராமங்களிலும் நாடார்கள் வேகமாக கத்தோலிக்க கிறிஸ்தவத்தை ஏற்று வந்தனர். 1847 க்கான கத்தோலிக்க கிறிஸ்தவ திருச்சபை புள்ளி விவரப்படி காரங்காடு பங்கின் கீழ் 127 கிளை சபைகள் இருந்தது அவற்றில் 7873 கிறிஸ்தவர்கள் இருந்தனர். வேங்கோடு பங்கின் கீழ் 55 கிளை சபைகள் இருந்தன அவற்றில் 2780 கிறிஸ்தவர்கள் இருந்தனர். இவர்களில் நாடார்களே மிகப்பெரும்பான்மையினர். கோட்டாறு பங்கில் 87 கிளை சபைகள் இருந்தன. அவற்றில் 6515 கிறிஸ்தவர்கள் இருந்தனர். அவர்களில் கணிசமான அளவில் நாடார்கள் இருந்தனர்.



### 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாடார்கள் மத்தியில் ஏற்பட்ட மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்

நாடார்கள் மத்தியில் சீர்திருத்த கிறிஸ்தவம் சார்ந்த மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் கும்பல் இயக்கம் 1802 இல் நடைபெற்றது. இதற்கான தொடக்கம் 1798, 1799 களில் தொடங்கியது.

#### தாவீது சுந்தரானந்தம்

இதற்கு அடிக்கோலியவர் காலங்குடியிருப்பைத் தந்தை ஊராகவும் விஜயராமபுரத்தைத் தாய் ஊராகவும்

கொண்ட சின்னமுத்து என்ற தாவீது சுந்தரானந்தம் ஆவார். சிறுவயதிலேயே பெற்றோரை இழந்த இவர் தாய்மாமனாரால் வளர்க்கப்பட்டு வந்தார். ஓர் நாள் இவரை இவரது அத்தை தயிர் கடையும் மத்தைக்கொண்டு அடித்ததால் வீட்டை விட்டு வெளியேறி கருப்பட்டி வணிகத்திற்காக ராஜபாளையம் நோக்கி சென்று கொண்டிருந்த வண்டி ஒன்றில் ஏறி ராஜபாளையம் வந்து சேர்ந்தார். பின்னர் ஸ்ரீவில்லிபுத்தூர் வந்து அங்கிருந்து தஞ்சாவூர் சென்றடைந்தார். அங்கு இவருக்கு கிறிஸ்தவ மத போதகர் தந்தை. ஷ்வார்ட்ஸ் ஐயரவர்களின் அறிமுகம் கிடைத்தது. கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டு தாவீது சுந்தரானந்தம் என ஞானஸ்நானம் பெற்றார். தஞ்சாவூர் மிஷனெரி ஷ்வார்ட்ஸ் ஐயரவர்கள் அவரை SPCK மிஷன் உபதேசியாராக பாளையங்கோட்டை பகுதிக்கு 1797 இல் அனுப்பி வைத்தார். அந்நேரம் அவர் சொந்த ஊரான காலங்குடியிருப்பு மற்றும் விஜயராமபுரம் வந்த போது இவரது நடை உடை பாவனைகளையும் இவர் ஏற்றிருந்த கிறிஸ்தவ சமயத்தையும் கண்டு உறவினர்கள் பெரிதும் ஆச்சரியமடைந்தனர். இவர் மூலமாக விஜயராமபுரத்தில் இவரது தாய் மாமா குடும்பம் மற்றும் தாய் வழி உறவினர்கள் கிறிஸ்தவத்தை ஏற்றனர்.



### 1802 இல் ஏற்பட்ட மாபெரும் மக்கள் திரள் கும்பல் இயக்கம்

அக்காலத்தில் போதகர். சத்தியநாதன் ஐயரவர்கள் SPCK மிஷன் போதகராக நற்செய்தி பணியை செய்து வந்தார்கள். அவரும் இவரும் இணைந்து சாத்தான்குளம் திசையன்விளை அருகில் உள்ள கரைச் சுற்று கிராமங்கள் எனப்பட்ட அனைத்து கிராமங்களிலும் நற்செய்தி அறிவித்து வந்தார்கள். மக்கள் கூட்டம் கூட்டமாக கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டனர். 1799 ஆகஸ்டில் முதலூர், 1800 இல் நாசரேத், சமாரியா, பெத்லகேம், எருசலேம், பெத்தானியா ஆகிய கிறிஸ்தவ கிராமங்கள் இவர்களால் நிறுவப்பட்டன.

1802 ஏப்ரல் முதல் டிசம்பர் வரை சுமார் 60 நாடார் கிராமங்களைச் சேர்ந்த 5,000 க்கு மேற்பட்டோர் கிறிஸ்தவர்கள் ஆயினர். இது நாடார்கள் மத்தியில் சீர்திருத்த கிறிஸ்துவம் சார்ந்த முதலாம் மாபெரும் மக்கள் திரள் கும்பல் இயக்கமாகும். மேற்கண்ட மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் கும்பல் இயக்கம் அக்காலத்தின் தென் திருவாங்கூர் சமஸ்தானம் (தற்போதைய கன்னியாகுமரி மாவட்டம்) பிச்சைகுடியிருப்பு கிராமம் வரை பரவியிருந்தது. அங்கு SPCK மிஷன் சபை நிறுவப்பட்டது.

### 19 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சாம்பவர்(பறையர்) மற்றும் நாடார்களுக்குள் தென் திருவாங்கூரில் ஏற்பட்ட மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்

சில ஆண்டுகளுக்குப் பின்னர் 1806 இல் LMS மிஷனெரியாக ரிங்கல்தௌபே தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் பொறுப்பேற்றார். தற்போதைய கன்னியாகுமரி மாவட்டம் அக்காலத்தில் தென் திருவாங்கூர் சமஸ்தானத்தில் இருந்தது. LMS மிஷன் சார்ந்த இந்த சீர்திருத்த கிறிஸ்தவ சபையின் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் கும்பல் இயக்கம் மயிலாடியில் தொடங்கியது. இதற்கு அடிகோலியவர் சாம்பவப்பறையர் சமூகத்தைச் சேர்ந்த மகராசன் ஆவார். அவர் மூலம் தொடங்கிய இந்த எழுப்புதல் நாடார் சமூகத்தினர் மத்தியில் வேகமாக வலுவடைந்தது. இந்த எழுப்புதல் இயக்கத்தின் தொடக்கமாக மயிலாடிக்கு LMS மிஷனெரியாக வந்த தென் திருவாங்கூர் அப்போஸ்தலன் ரிங்கல்தௌபே இருந்தார். அவருக்குப் பின்னர் வந்த LMS மிஷனெரிகள் ஆன சார்ல்ஸ் மீட், சார்ல்ஸ் மால்ட் காலத்தில் பல்லாயிரக்கணக்கான நாடார்கள் கிறிஸ்தவத்தை ஒரு சில ஆண்டுகளுக்குள் ஏற்றதன் மூலம் இந்த மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் கும்பல் இயக்கம் உச்சத்தை அடைந்தது. சீர்திருத்த கிறிஸ்தவம் சார்ந்த இரண்டாம் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் கும்பல் இயக்கமாக இது பார்க்கப்படுகிறது.

### 19 ஆம் நூற்றாண்டில் ரேனியஸ் காலத்தில் (1820–1838) நாடார்களுக்குள் ஏற்பட்ட மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்

பாளையங்கோட்டையை தலைமை இடமாகக் கொண்டு சி.எம்.எஸ். மிஷனெரியாக நற்செய்திப் பணியாற்ற வந்த ரேனியஸ் ஐயரவர்கள் காலத்தில் நாடார் சமூகத்தில் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் பெரிய இயக்கமாக வளர்ந்தது. 1820 முதல் 1838 வரையிலான ரேனியஸ் ஐயரவர்களின் ஊழிய காலத்தில் சுமார் பத்தாயிரத்துக்கு மேற்பட்டோர் கிறிஸ்தவத்தை ஏற்றுக் கொண்டனர். அவர்களில் பெரும்பாலானோர் பனை மரங்கள் சார்ந்த பனையேற்று தொழிலை வாழ்வியலாகக் கொண்ட நாடார் சமூகத்தினர் ஆவர். ரேனியஸ் ஐயரவர்களின் ஊழிய காலத்தில் சுமார் 400 திருச்சபைகள் உருவானது. சுமார் 150 பள்ளிக்கூடங்கள் நிறுவப்பட்டது. ரேனியஸ் ஐயரவர்களுக்குப் பின்னர் பாளையங்கோட்டைக்கு தலைமை கண்காணிப்பு மிஷனெரிகளாக வந்த பெற்றிட் (1835 -1847), சார்ஜென்ட் (1847 - 1889) உவாக்கர் (1889 - 1897), E.S.கார் மிஷனெரி (1897 - 1915) ஆகியோர் 1915 வரை இந்த மாபெரும் மக்கள் திரள் கும்பல் இயக்கத்தை சிறப்பாகவழி நடத்திச் சென்றனர்.

### தென் தமிழ்நாட்டில் ஆதி திராவிடர் (பறையர்) மற்றும்

### தேவேந்திர குல வேளாளர் (பள்ளர்) சமூகங்கள் மத்தியில் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் கும்பல் இயக்கம்

தூய சவேரியார் காலம் தொடங்கி தத்துவ போதகர் ராபர்ட் டி நொபிலி தூய. ஜாண் டி பிரிட்டோ ஆகியோரின் ஊழிய காலங்களிலும் ஆதிதிராவிடர் (பறையர்) மற்றும் தேவேந்திர குல வேளாளர் (பள்ளர்) சமூகத்தினர் கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொள்ளத் தொடங்கினர். தூய. சவேரியார் காலத்தில் கொச்சியில் இருந்து கால்நடையாக மேற்கு தொடர்ச்சி மலையைக் கடந்து கல்லிடைக்குறிச்சி, வீரவநல்லூர், புதுக்குடி, சேரன்மகாதேவி வழியாக தூய. சவேரியார் நடந்து சென்ற போது அறிவித்த நற்செய்திப் பணியின் மூலம் வீரவநல்லூர், புதுக்குடி, சேரன்மகாதேவி கிராமங்களில் ஆதிதிராவிடர் (பறையர்) தெருவில் ஒட்டுமொத்தமாக கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் ஆனார்கள். இன்றளவும் அந்த கிராமங்களில் அவர்கள் உள்ளனர்.

தத்துவ போதகர் ராபர்ட் டி நொபிலி அவர்கள் தொடங்கிய மதுரை மிஷன் ஊழியத்தின் மூலம் மதுரை மற்றும் அதன் சுற்றுவட்டார கிராமங்களில் ஆதிதிராவிட சமூகத்தினர் கத்தோலிக்க கிறிஸ்தவத்தை பெரும் திரளாக ஏற்றனர். அவர்களை வழிநடத்த தனி போதகர்களை அவர் நியமித்திருந்தார்.

தமிழ்நாட்டிற்கு வந்த முதல் சீர்திருத்த கிறிஸ்தவ போதகரான சீகன் பால்கு காலத்தில் மாபெரும் மக்கள் திரள் கும்பல் இயக்கம் ஆதிதிராவிடர் சமூகத்தில் இருந்து எழும்பியது. சீகன் பால்கு இந்த சமூகத்தினர் மத்தியில் நெருக்கமாக பழகி அவர்கள் செய்த ஊழியம் காரணமாக அவரது பேச்சு தமிழ் நடை இந்த சமூகத்தார் பேசிய பேச்சு தமிழ் நடையை ஒத்து காணப்பட்டது எழுத்து நடையும் அவ்வாறே காணப்பட்டது. அவர் மொழி பெயர்த்த கிறிஸ்தவ வேதாகமம் ஆதிதிராவிடர் (பறையர்) வேதம் என்றழைக்கப்பட்டது. ஆனாலும் அதற்காக அவர் எவ்வித கவலையும் கொள்ளாமல் தமது பணியைச் சிறப்பாக செய்து வந்தார். ராஜா நாயக்கன் என்ற ஆதிதிராவிட சமூக தலைவர் காலத்தில் இந்த கும்பல் இயக்கம் வலுவடைந்து வளர்ச்சி பெற்றது காவிரி டெல்டா கிராமங்களில் அக்காலத்தில் இந்த இயக்கம் பரவி வளர்ந்தது.

தென் தமிழ்நாட்டில் ஆதிதிராவிடர் மற்றும் தேவேந்திர குல வேளாளர் சமூகத்தினர் மத்தியில் குளோரிந்தா அம்மையார் காலம் தொடங்கி சீர்திருத்த கிறிஸ்தவ நற்செய்தி பரவத் தொடங்கியது உக்கிரன்கோட்டையில் சபை உருவானது.

ஆனால் ரேனியஸ் ஐயரவர்கள் தம் காலத்தில் 1829 இல் உக்கிரன்கோட்டையில் சபை உருவானது என்ற குறிப்பை ஆதாரத்துடன் குறிப்பிட்டுள்ளமையால் எந்த காலம் அந்த சபை உருவானது என்பதில் உறுதியான கருத்துக்கு வர இயலவில்லை..

### தேவேந்திரகுல வேளாளர் மத்தியில் 19 ஆம் நூற்றாண்டில் ஏற்பட்ட மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்

ரேனியஸ் ஐயரவர்களின் நற்செய்திப் பணியால் 1823 இல் தேவேந்திரகுல வேளாளர் வசித்த கிராமமான கீழப்பாட்டத்தில் சபை உருவானது. 1829 இல் உக்கிரன்கோட்டை, முப்பிலிபட்டி, ஜம்புலிங்கபுரம் ஆகிய தேவேந்திர குல வேளாளர் வசித்த மூன்று கிராமங்களில் திருச்சபை உருவானது. பிற்காலத்தில் உக்கிரன்கோட்டை அதைச் சுற்றியிருந்த தேவேந்திரகுல வேளாளர் வசித்த கிராமங்களில் நற்செய்தி பரவுவதற்கு தாய்க்கிராமமாக விளங்கியது. சார்ஜென்ட் ஐயரவர்கள் CMS தலைமை கண்காணிப்பு மிஷனெரியாகப் பணி செய்த காலத்தில் (1847-1889) பார்வதியாபுரம், மேல இலந்தகுளம், குப்பனாபுரம் மற்றும் சுற்று கிராமங்களில் தேவேந்திர குல வேளாளர் சமூகத்தினர் மத்தியில் ஆயிரக்கணக்கானோர் கிறிஸ்தவத்தை ஏற்றதன் மூலம் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் ஏற்பட்டது.

E.S.கார் மிஷனெரி ஐயரவர்கள் CMS தலைமை கண்காணிப்பு மிஷனெரியாகப் பணி செய்த காலத்தில் (1897-1915) வடக்கு அச்சம்பட்டி, தடியாபுரம் மற்றும் சுற்று கிராமங்களில் வசித்த தேவேந்திர குல வேளாளர் சமூகத்தினர் மத்தியில் ஆயிரக்கணக்கானோர் கிறிஸ்தவத்தை ஏற்றதன் மூலம் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல் ஏற்பட்டது.

### ரேனியஸ் ஐயரவர்களின் நற்செய்திப் பணியால் ஆதிதிராவிடர் (பறையர்) மத்தியில் 1822 இல் மாபெரும் மக்கள் திரள் எழுப்புதல்

1822 இல் ரேனியஸ் ஐயரவர்களின் நற்செய்திப் பணியால் ஸ்ரீவைகுண்டத்தில் இருந்து சில கி.மீ தொலைவில் இருந்த ஆதிதிராவிடர்கள் வசித்த திருப்புளியங்குடி கிராமத்தில் நம்பி எனும் பெரியவரும் குடும்பத்தினரும் திருமுழுக்கு பெற்று கிறிஸ்தவராயினர். கிராமத்தில் பெரும் எதிர்ப்பு கிளம்பியது நம்பியின் மனைவி நம்பியம்மாள் இரத்தசாட்சியாக மரணம் அடைந்தார். சில ஆண்டுகளில் அங்குள்ள ஆதிதிராவிடர்களில் பெரும்பாலானோர் கிறிஸ்தவராயினர். இன்றளவும் கிறிஸ்தவ பக்தியில் சிறந்த திருச்சபையாக திருப்புளியங்குடி திருச்சபை காணப்படுகிறது.



ஒரு நகரத்தில் சுவிசேஷ நற்செய்தி கூட்டம் ஒன்று நடத்தப்படும்பொழுது ஒரு சிறு பெண் தன் தகப்பன் மடியில் உட்கார்ந்திருந்தாள், கிறிஸ்துவை அறியாத மக்கள் வாழ்க்கை முறைகளையும், அவர்களுக்குள் நடக்கும் கொடூர வழக்கங்களையும் பற்றிக் கேட்கவே, கருத்தாய்க் கவனித்துக்கொண்டிருந்த அந்தப் பிள்ளையின் கண்களிலிருந்து கண்ணீர் மாலை மாலையாய் வடிந்தது, தகப்பன் அதைக் கவனித்தார். வீடுவந்து சேர்ந்தவுடன் அவள்: அப்பா, அந்த கிறிஸ்துவை அறியாத மக்களுக்கு சுவிசேஷத்தை அனுப்பும்படி நானும் ஏதாவது உதவி செய்யக்கூடாதா என்று கேட்டான். அதற்குத் தகப்பன்: மகளே. நீ என்னச்செய்யக்கூடும்; நீ ஒரு சின்னப்பிள்ளை, நீ பணஞ்சம்பாதிக்கவா செய்கிறாய் என்று சொல்ல, அவள்: அப்பா, தாயார் வாரந்தோறும் எனக்கு ஒரு அணா இனாம் கொடுக்கிறார்கள். அதை நான் இதற்குக் கொடுக்கக்கூடாதாவென்றாள் தகப்பனார் அப்படிச் செய்யலாம், நான் உனக்கு ஒரு காணிக்கைப்பெட்டியும் தருகிறேன் என்றார். அதுமுதல் அந்தப்பிள்ளை வாரத்துக்கு ஒருதரம் தன்னுடைய அணாவை அதிலே போட்டு வைத்தது.

சில வாரங்களுக்குப்பின் அந்தச்சிறு பெண் வியாதிப்பட்டு மரித்தாள். அவளை அடக்கம் பண்ணின பிற்பாடு, தகப்பன் அந்தக் காணிக்கை பெட்டியை போதகரிடத்தில் கொண்டுபோய்க் கொடுத்து, இது மரித்துப் போன என் பிள்ளையினுடையது; மிஷனெரி சங்கத்துக்கென்று அவன் சேமித்து வைத்தது இதிலிருக்கின்றது என்றார். கடேசியாக நடந்த சுவிசேஷ நற்செய்தி கூட்டத்திற்கு பின்பு அவள் வீட்டிற்கு வந்தவுடன் தன் பிள்ளை சுவிசேஷ நற்செய்திக்கு காட்டிய அக்கறையும், சொல்லி, நானே இதைத் திறந்து எடுக்க மனம்வராமல், தங்களிடத்துக்குக் கொண்டு வந்தேன்; இதைத் திறந்து பார்த்தால், பதினேழு அணாக்கள் இருக்குமென்றார். போதகர் பெட்டியைத்திறந்து, அணாக்களை எண்ணுகையில், தகப்பன்சொன்னபடி பதினேழு அணாக்களல்ல. பதினெட்டு அணாக்கள் இருக்கக்கண்டார். தகப்பனார் ஆச்சரியப்பட்டு, கூட்டம் வைத்து எத்தனைவாரங்களாச்சு என்று போதகரிடம் கேட்க, அவர் சற்று யோசித்துப்பார்த்து, சரியாய்ப் பதினேழு வாரந்தான் என்றார். சொன்னபோது, தகப்பன் வீட்டிற்குபோய், மனைவியினிடத்தில் இதைப்பற்றிக் தாய் பதினெட்டாவது அணா வந்த விபரத்தைத் தெரிவித்தாள். பிள்ளை மரிக்கிறதற்கு முந்தின நாளில் பக்கத்து வீட்டு பெண்மணி. அவளை வந்தபோது, அதின் நாவரண்டு, உதடுகள் வறட்சியுற்றிருக்கண்டு, கிச்சிலி பழமொன்று வாங்கிச்சொடுக்கும்படி ஒரு அணா கொடுத்து விட்டுப்போனாள். அதற்குப்பின்பு பிள்ளை: சும்மா எனக்கு நாவறட்டுயிருப்பது உண்மைதான்; இச்கிலிப்பழம் நன்றாய்த்தானிருக்கும். ஆனால் என்னுடைய காணிக்கைப் பெட்டியை இங்கே கொண்டுவாருங்கள்.

இந்த அணாவை நான் அதில் போடட்டும் என்றாள். நான் அந்தப் பெட்டியைக்கொண்டு போனேன், அவள் நடுங்குகிற தன் கையால் புன்சிரிப்புள்ள முகத்தோடு: **எனக்கு ஒரு கிச்சிலிப்பழம் அவசியமாயிருப்பதைவிட. கிறிஸ்துவை அறியாத மக்களுக்கு சுவிசேஷம் அறிவிக்கப்படுவது மிகவும் அவசியம்** என்று சொல்லிக்கொண்டு அதை உள்ளே போட்டாள். இதுதான் அவள் மரிக்குமுன்செய்த கடைசிச் செய்கை. அந்த அணாத்தான் பெட்டியிலிருந்த பதினெட்டாவது அணா என்றாள். இன்றைக்கும் வட இந்திய பகுதிகளில் கிறிஸ்துவை அறியாத மக்கள் இருளில் மூழ்கியுள்ளனர். அப்படிப்பட்ட மிஷன் (இயக்கங்கள்) ஊழியங்களுக்காக கொடுக்கும் உள்ளங்களை எழுப்பித்தாரும். நமது பிள்ளைகளும் திருச்சபை வளர்ச்சியில் இணைத்து செயல்படட்டும்.

**ஆண்டவா உந்தன் சேவைக்கடியேன் அர்ப்பணம் செய்ய தூண்டும் உன் ஆவி அருள்வாய்!**

# மிஷனெரிவாஞ்சை



# நிசேயா விசுவாசப் பிரமாணம்.

By Rev. P. L. Browne B. A., L. T.

பரி: நற்கருணை ஆராதனையில் 5-ம் 6-ம் நூற்றாண்டுகளில் இது வழங்கப்பட்டது. சக்கரவர்த்தி ஜஸ்ற்றின் 565-666-ல் பரி. நற்கருணை ஆராதனையில் பிரதிஷ்டை ஜெபத்திற்கு பின்னும், கர்த்தருடைய ஜெபத்திற்கு முன்னும், சொல்லப்பட வேண்டுமென்று ஏற்பாடு செய்தானென்று சொல்லப்பட்டாலும், கர்த்தருடைய இராப்போஜனத்திற்கு முன்வந்த அன்பின் விருந்தில் சொல்லப்பட்டதே ஒழிய, பரி. நற்கருணை ஆராதனையில் வழங்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஆரம்பத்திலிருந்தே கீழ்சபையில் இந்த விசுவாசப் பிரமாணம் பரி. ஞானஸ்நான ஆராதனையிலும் பிந்தின காலங்களில் காலை மாலை ஆராதனைகளிலும் உபயோகப்பட்டு வந்தது. இந்த விசுவாசப் பிரமாணம் மாத்திரம் கிரேக்கு சபைக்குரியது.

லத்தீன் சபையில் 589-ல் இந்த விசுவாசப் பிரமாணம் இத்தாலிய சபையின் ஜெப புஸ்தகத்தில் பரி. நற்கருணை ஆராதனையில் கர்த்தருடைய ஜெபத்திற்குமுன் வழங்கப்பட்டதாக விளங்குகிறது. மேலச் சபையிலும் மற்றும் பாகங்களிலும், நாம் வழங்கிவருகிறபடி பரி. சுவிசேஷ வாக்கியத்திற்குப் பின்னால் சொல்லப்பட்டும் வந்திருக்கிறது. ஆனால் ஆங்கிலோ-கத்தோலிக் சபையில் மாத்திரம் இந்த விசுவாச அறிக்கையை பரி. நற்கருணை பரிமாறும் போதெல்லாம் சொல்லப்பட வேண்டுமென்று, திருச்சபை கட்டளையிருக்கிறது. இந்த வழக்கம் 1552-ல் திட்டமாக ஏற்படுத்தப்பட்டது.

### i. Article

**'வானத்தையும் பூமியையும், காணப்படுகிறதும், காணப்படாததுமான, எல்லாவற்றையும், படைத்தவராயிருக்கிற சர்வ வல்லமையுள்ள பிதாவாகிய ஒரே தேவனை விசுவாசிக்கிறேன்.'**

**தேவனை விசுவாசிக்கிறேன்** என்று சொன்னால் தேவன் ஒருவர் உண்டென்று, விசுவாசிக்கிறேன் என்று மாத்திரமல்ல அவருடைய அன்பையும், வல்லமையையும், நம்பி அவர்மேல் சார்ந்து என்னை அவருக்கு சமூலமாய் பிரதிஷ்டை செய்கிறேன் என்றர்த்தமாம்.

### ii.தேவன் உண்டு என்பதற்கு அத்தாட்சி.

(a)**தேவன் ஒருவர் உண்டு** என்ற எண்ணம் மனுஷருடைய மனத்தில் இயற்கையாய் அமைந்திருக்கிறது. மிருகத்திலிருந்து நம்மை வித்தியாசப்படுத்துவது இந்த எண்ணந்தான்.

(b) **எத்தேசத்தாராலும், எக்காலங்களிலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.**

(c)காணப்படுகிற அண்ட சராசரங்களுக்கு மூல காரணமான ஒரு வஸ்து இருக்கவேண்டும். அந்த வஸ்துவானவர் சிருஷ்டிப்புகளுக்கு உன்னதமானவரும், நித்தியத்துவமுடையவரும், தம்மில் தாமாயிருக்கிறாரென்றும் விளங்குகிறது.

(d)இந்த அண்ட சராசரங்களின் இயற்கையின் சட்டங்களும், சத்துவங்களும், ஒவ்வொன்றும் ஒரு நோக்கத்தை நிறைவேற்றுகிறது. ஆனால் அச்சட்டங்களும், சத்துவங்களும், தாங்கள் நிறைவேற்றும் நோக்கங்களை அறியாதிருக்கின்றன. இவைகள் அறியாதிருக்கும் நோக்கங்கள் சரிவர நிறைவேற ஒழுங்கு செய்யும் புத்தியும் யூகமுமுள்ள இன்னொரு வஸ்து இருக்க வேண்டுமென்று விளங்குகிறது.

(e) இது சரி இது தப்பிதம் என்று மனுவுக்கு இயற்கையாய்ச் சொல்லும் மனச்சாட்சி மனுஷன் தன்னிலும் அளவிடப்படாதவிதமாய் மேலான ஒருவருக்கு கணக்கு ஒப்புவிக்க கடமைப்பட்டிருக்கிறான் என்று காட்டுகிறது.

### iii. ஒரே தேவனை விசுவாசிக்கிறேன்

(a)இதைப்பற்றி நிசேயா விசுவாசப்பிரயாணம் வற்புறுத்திப் பேசுகிறது. ஒன்றுக் கதிகமான மூல வஸ்துக்கள் இருப்பது கூடாத காரியம். பரி. அதனாசியஸ் விசுவாசப் பிரமாணம், மூன்று தேவர்களில்லை. தேவன் ஒருவரே என்றும், மூன்று கர்த்தர்களில்லை, கர்த்தர் ஒருவரே என்றும் சாதிக்கிறது, பரி. திரித்துவத்தின் மூன்று பெர்சன்களும் (Persons) ஆட்கள் ஒரே தன்மையுடையவர்களாயிருக்கிறபடியினால் ஒரே தேவன் என்று சாதிப்பது மகிமை பொருந்திய திரித்துவத்தில் மூன்று பேர்களிருக்கிறார்களென்று சொல்வதற்கு விகாரப்படாது.

(b) ஒரே தேவன் உண்டென்பதற்கு வேதவாக்கியங்கள்.

1. **'நம்முடைய தேவனாகிய கர்த்தர் ஒருவரே கர்த்தர்.' உபா. 6.4.**
2. **'என்னைத் தவிர வேறே தேவன் இல்லை.' எசா 44: 4.**
3. **'ஒன்றான மெய்த் தேவனாகிய உம்மையும். பரி யோவா 17: 4,**
4. **'ஒருவரேயன்றி வேறொரு தேவன் இல்லை என்றும் அறிந்திருக்கிறோம்." 1 கொரி 8: 4.**

### iv. பரி. திரித்துவம் ஒரே ஏக வஸ்துவாய் இருக்கிறார் என்று சொல்லும்போதே

(a) ஒருவர் மூவராய் இருக்கிறார் என்ற திரித்துவ ரகசியமும் அதிலடங்கியிருக்கிறது. திரித்துவம் என்ற பதம் வேதத்தில் இல்லாவிட்டாலும் அதின் கருத்து வேதத்தில் அடங்கியிருக்கிறது. இப்பதம் முதலாவது உபயோகித்தவர் அந்தியோகியாப் பட்டணத்து தீயாபில்ஸ் என்ற சபைப் பிதா என்பவர், திரித்துவத்தை ஏகத்துவமாகவும், ஏகத்துவத்தை திரித்துவமாகவும் வணங்க வேண்டுமென்றும், அம்மூவரில் ஒவ்வொருவரும் தனித்தனியாக தேவனென்றும், கர்த்தரென்றும் அறிக்கையிட வேண்டுமென்றும், கிறிஸ்து மார்க்க சத்தியம், கட்டளையிட்டிருக்கிறது போல மூன்று தேவர்கள் உண்டென்றும், மூன்று கர்த்தர்கள் உண்டென்றும் சொல்லக்கூடாதென்று திருச்சபைக்குறிய பொதுவான சித்தாந்தம் கட்டளையிட்டிருக்கிறதென்று, பரி. அதனாசியஸ் அதனாசியு விசுவாசப் பிரமாணம் கூறுகிறது.

(b) பரி. திரித்துவத்துள்ள மூன்று பெர்சன்களுக்குள்ள (Persons) ஒற்றுமை. சிருஷ்டிக்கப்படாமை, அளவிடப்படாமை,

சித்தியத்துவம், சர்வ வல்லமை, ஒரே தன்மையுடைய தெய்வத்துவம், கர்த்தத்துவம் முதலியவைகளில் மூன்று ஆட்களும், ஒன்றுபோலிருக்கிறார்கள்.

(c) ஆனால் தேவனாகிய பிதா தம்மில் தாமாயிருந்து, தெய்வத்துவத்தின் ஊற்றாயிருக்கிறார். தேவனாகிய குமாரன் நித்தியமாய் பிதாவினால் ஜெனிப்பிக்கப்பட்டவர். தேவனாகிய பரிசுத்த ஆவி பிதாவினாலும் குமாரனாலும் இருக்கிறவர். புறப்படுகிறவர். திரித்துவத்தின் பெர்சன்க்ளுகுரிய (Persons) வேறுபாடுகள் இவைகளே.

(d) பரி. திரித்துவத்தைப்பற்றி வேத ஆதாரங்கள். பழைய ஏற்பாட்டில்

1. தேவனைப் பற்றிப் பேசும்போது பன்மை உபயோகப்படுகிறது. (மூல பாஷைகளிலும் மற்ற பாஷைகளிலும்)
2. நமது சாயலாகவும் நமது ரூபத்தின் படியேயும் மனுஷனை உண்டாக்குவோமாக ஆதி 1: 26. 'நம்மில் ஒருவரைப்போல் ஆனான்' ஆதி 3: 22.
3. ஆசாரியனுடைய ஆசீர்வாதத்தில் கர்த்தர் என்கிற நாமம் மூன்று தரம் மூன்று ஆசீர்வாதமாகக் கூறப்படுகிறது. எண்ணாகமம் 6: 24-26. (மனப்பாடமாக்க)
4. சேராபீன்கள் ஒருவரை ஒருவர் பார்த்து சேனைகளின் கர்த்தர் பரிசுத்தர், பரிசுத்தர், பரிசுத்தர் என்று பாடுகிறார்கள்.
5. புதிய ஏற்பாட்டில் (1) குமாரன் பரி. ஞானஸ்நானம் பெற்றார். பிதா அசரீரி வாக்கருளினார், பரி. ஆவி குமாரன் மீது அமர்ந்தார். பரி.மத் 3:16-17.

(b) குமாரன் ஜெபிக்கிறார். பிதா ஜெபத்தைக் கேட்டு பரிசுத்த ஆவியை அருளுகிறார். பரிசுத்தாவி வருகிறார். பரி. யோவா 14: 16.

(c) கர்த்தரின் கடைசிக் கட்டளை, 'பிதா குமாரன் பரிசுத்த ஆவியின் நாமத்திலே ஞானஸ்நானம் கொடுங்கள்' என்பது. பரி மத் 28:19

தீர்க்கதரிசிகள் அப்போஸ்தலர்கள் சபை பிதா சர்வ சங்க கவுன்சலர்களால் இந்த திரித்துவ உபதேசம் போதிக்கப்படாமல் நாம் நமது ஆண்டவர் இடமிருந்து இந்த உபதேசத்தைப் பெற்றிருக்கிறோம்.

## V. பிதாவாகிய ஒரே தேவனை விசுவாசிக்கிறேன்.

திரித்துவத்தின் முதல் பெர்சன் (Person) தேவனாகிய பிதா. நம்மெல்லோருக்கும் பிதாவாகிய ஒரே தேவன் உண்டு என்று பரி பவுல் 1 கொரி 8: 6-ல் சொல்லுகிறார். தேவன் பிதா என்ற சத்தியம் பூர்வீக கிறிஸ்துவை அறியாத மக்களிடமும் காணப்படுகிறது. அப் 17 : 28-ல் பரி பவுல் அத்தேனரைப் பார்த்து 'அப்படியே உங்கள் புலவர்களிலும் சிலர் நாம் அவருடைய சந்ததியார் என்று சொல்லியிருக்கிறார்கள் என்று எடுத்துரைக்கிறார். எபிரேய தீர்க்கதரிசிகளில் ஏசாயா 'கர்த்தாவே, நீர் எங்கள் பிதாவும் எங்கள் மீட்பருமாயிருக்கிறீர். இது பூர்வ காலமுதல் உம்முடைய நாமம்' ஏசாயா 63:16 என்றும் மல்கியா "நம்மெல்லோருக்கும் ஒரே பிதா இல்லையோ" என்றும் கூறுகிறார்கள். ஆனால் திரித்துவத்தில் இரண்டாவது பெர்சனாகிய (Person) கிறிஸ்து எங்கள் பிதாவென்று அழைக்காமல் என் பிதா என்று அழைக்கிறார்.

**தேவன் பிதா என்பதற்கு வேதத்திலிருந்து ஆதாரங்கள்.**

பரி மத் 6:9; 1 கொரி 8:6; எபி 1:7:9; யோபு 38:7; யோவா 20:17; 1 யோவா 3:1; எபி 1: 2 ; ரோம 8 : 17

**தேவன் (1) குமாரனுக்குப் பிதா.**

1. நித்தியமாய் ஜெனிப்பிக்கப்பட்ட குமாரனாயிருக்கிறதால் நித்திய பிதாவின் நித்திய குமாரனாயிருக்கிறார்.
2. **சிருஷ்டிப்பின் சம்பந்தமாய்ப் பிதா ஆவிகளின் பிதா** என்று அழைக்கப்படுகிறார். எபி 12:9 'தேவபுத்திரர்' யோபு 38: 7. மனுஷன் அவரது சந்ததியார் என்று அழைக்கப்படுகிறான், அப் 18: 28 'ஆதாம்' தேவனால் உண்டானவன். (Son of God) பரி. லூக். 3: 38
3. **இட்சிக்கப்பட்டவர்களின் பிதா.** ரோம 8: 15 'அப்பா பிதாவே' என்னும் புத்திர சுவிகாரத்தின் ஆவியைப் பெற்றிருக்கிறோம்' நமது ஆண்டவர் தம்முடைய சீஷர்களைப் பார்த்து 'என் பிதா' 'உங்கள் பிதா' பரி. யோவா. 20: 17. எல்லாவற்றிற்கும் அவர் சுதந்தரவாளி எபி 1:.2. நாம் அவருடன் உடன் சுதந்தரராயிருக்கிறோம். ரோம 8-17.

சர்வ வல்லமையுள்ள என்பது வல்லமையை மாத்திரமல்ல சர்வ அதிகாரமுடைய சர்வ சக்கரவர்த்தி என்றும் காட்டுகிறது. கிரேக்குப் பதத்தில் "சேனைகளின் கர்த்தர்" என்றர்த்தமாம்.

**வானத்தையும் பூமியையும் காணப்படுகிறதும் காணப்படாததுமான** எல்லாவற்றையும் படைத்தவராயிருக்கிற.......

"கர்த்தர் ஆறு நாளைக்குள்ளே வானத்தையும் பூமியையும் அவைகளிலுள்ள எல்லாவற்றையும் உண்டாக்கி (யாத் 20. 11)

இந்த சிருஷ்டிப்பில் திரித்துவத்தின் மூன்று பெர்சன்களும் சம்பந்தப்படுகிறார்கள்.

**(1) குமாரன் மூலமாய் "என் பிதா இதுவரைக்கும் கிரியை செய்து வருகிறார். நானும் கிரியை செய்து வருகிறேன்." பரி யோவா 5:17.**

**(2) "சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று. உண்டானதொன்றும் அவராலேயல்லாமல் உண்டாகவில்லை."**

**(3) அவருக்குள் சகலமும் சிருஷ்டிக்கப்பட்டது, பரலோகத்திலுள்ளவைகளும் பூலோகத்திலுள்ளதுமாகிய காணப்படுகிறவைகளும், காணப்படாதவைகளுமான சகல வஸ்துக்களும் சிங்காசனங்களானாலும், கர்த்தத்துவங்களானாலும், துரைத்தனங்களானாலும், அதிகாரங்களானாலும், சகலமும் அவரைக்கொண்டும், அவருக்கென்றும் சிருஷ்டிக்கப்பட்டது.' கொலோ 1: 4.**

**பரிசுத்த ஆவியின் சம்பந்தம். "தேவ ஆவியானவர் ஜலத்தின். மேல் அசைவாடிக்கொண்டிருந்தார்." ஆதி 1: 2.**

**"அவருடைய வாயின் சுவாசத்தினால் அவைகளின் சர்வசேனையும் உண்டாக்கப்பட்டது." சங் 33: 6.**

**"தமது ஆவியினால் வானத்தை அலங்கரித்தார்." யோபு 26: 13**

